4 பக்கங்கள் 13 காசுகள்

பதிவு எண் எம். 8798

**இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)**

**தமிழ் மாநில 9-வது மாநாடு**

★ உழைக்கும் மக்களின் உரிமைகளைக் காக்க

★ தமிழகத் தொழிலாளி வர்க்கத்தின் போராட்டப் பாதையை வகுக்க

1971, நவம்பர் 25 முதல் 28 வரை சேலம் மாநகரில் சிறப்பாகக் கூடுகிறது.


# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 9-ஏ ] (மதுரை 21—11—71 ஞாயிறு) [ மலர் 80


**மாநில மாநாட்டிற்கு முன்**
**மாநிலக் குழுக் கூட்டம்**

**தோழர்களின் கவனத்திற்கு**

தோழர்களே !

நமது மாநிலக் குழுக் கூட்டம் 24—11—71-ம் தேதியன்று காலை சேலம் நகர் அஸ்தம்பட்டியிலுள்ள நகராட்சி பயனியர் விடுதியில் நடைபெறும்

மாநிலக் குழு உறுப்பினர்கள் சேலம் ஜங்ஷனிலிருந்தும், சேலம் டவுன் மத்திய பஸ் நிலையத்திலிருந்தும் அஸ்தம்பட்டிக்கு டவுன் பஸ்ஸில் வரலாம்.

பயனியர் விடுதி அஸ்தம்பட்டி பஸ் நிலையத்திற்கு அருகிலேயே உள்ளது.

வாழ்த்துக்கள்,
மா. க. செயற் குழு.

---

**பானைக்குள்ளேயே யானை!**




விலைவாசி உயர்வுக்கு அடிப்படையாக உள்ள காரணங்களை அகற்றாமல்—கொள்ளை லாபமே குறிக்கோளாகக் கொண்டு மக்களைச் சூறையாடும் ஏகபோக முதலாளிகள்—வர்த்தகச் சூதாடிகளைத் தாக்காமல் பணக்கார வர்க்கங்கள் மீது வரி விதிக்காமல்—நோட்டு அச்சடித்தும்—மக்கள் பயன்படுத்தும் பண்டங்கள் மீது வரி விதித்தும் பணம் தேடி வரும் இந்திரா அரசு—

விலைவாசி உயர்வைக் கண்டுபிடிக்க—கட்டுப்படுத்த ஒரு கண்டிரோல் போர்டை நியமித்துள்ளது. —செய்தி

---

அரசியல் நோக்கங்களுக்காக

## அரசு ஊழியர் வேலை நீக்கம் செல்லாது

புதுடில்லி, நவ. 20— பஞ்சாப் மின்சார வாரிய ஊழியர்கள் இருவரை பஞ்சாப் அரசாங்கம் வேலையைவிட்டு நீக்கியது செல்லாது என்று சுப்ரீம் கோர்ட் நேற்று தீர்ப்பளித்தது.

அரசியல் காரணங்களுக்காக இருவரையும் வேலையை விட்டு நீக்கியது செல்லாது என்று பஞ்சாப் உயர்நீதிமன்றம் கூறியிருந்த தீர்ப்பை சுப்ரீம் கோர்ட்டும் ஊர்ஜிதம் செய்தது.

முன்னாள் முதலமைச்சர் லட்சுமண்சிங் கில்லுக்கு சட்டமன்ற உறுப்பினர்களின் ஆதரவைத் திரட்டியதாகவும் ஒரு ஊழியர் லஞ்சம் வாங்கினர் என்றும் பஞ்சாப் அரசாங்கம் தன்னுடைய வேலை நீக்க உத்தரவில் கூறியிருந்தது.

---

# யுத்தம் வந்தால்...!

## பங்களாதேஷ் விடுதலைக்கு பணியாற்றிட வாரீர் !

## மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி அறைகூவல்

கல்கத்தா, நவ. 20—

**இந்திய—பாகிஸ்தான் எல்லையில் இன்று நிகழ்ந்து வரும் அத்து மீறல்களும், பங்களாதேஷ் மக்களின் விடுதலைப் போராட்டத்தை ஒடுக்க பாக். ராணுவ வெறியர்கள் புரிந்து வரும் அக்ரமங்களும், மனித குலத்தின் நாகரீக உணர்ச்சிக்கே சவால் விடுத்துள்ள யாகியாகானின் நீசத்தனமான செயல்களும் சேர்ந்து யுத்தம் வரக் கூடிய அபாயம் ஏற்பட்டிருப்பதைப் பற்றி இந்திய மக்களை மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் அரசியல் தலைமைக் குழு (பொலிட் பீரோ) இன்று வெளியிட்ட ஓர் அறிக்கையில் எச்சரித்துள்ளது.**

இத்தகைய அபாயத்தை எதிர்நோக்க இந்திய மக்கள் தயாராகும்படி அறை கூவல் விடுத்துள்ளது.

பங்களாதேஷ் மக்களது வீரமிகுந்த, தியாகம் நிறைந்த போராட்டம் தீவிரமாகிவருவதால் பாகிஸ்தான் ராணுவ வெறியர்கள் காட்டுமிராண்டித்தனமான நீசச்செயல்களில் ஈடுபட ஆரம்பித்துள்ளனர்.

மிருகங்களைச் சுட்டுக்கொல்வது போல் நிரபராதி மக்களைப் படுகொலைப் புரிந்து வருகின்றனர்.

அவர்களது மூர்க்கத்தனமும் வெறித்தனமும் நாகரீக எல்லைகளை எல்லாம் மீறிப் போய்க்கொண்டிருப்பதால், சூதாட்டத்தில் மூழ்கிவிட்ட ஒரு வெறியனைப் போல் பங்களாதேஷ் பிரச்னையில் இந்தியாவுடன் பாகிஸ்தான் யுத்தத்திலேயே இறங்கக்கூடிய பேரபாயம் ஏற்பட்டுள்ளது.

இன்று நடைபெற்றுவரும் எல்லை மோதல்களும், எல்லை மீறல்களும் ஒரு யுத்தத்தில் முடியுமானால், இதற்குக்காரணமாக இருக்கும் பிரச்னை எது என்பதில் தெளிவு வேண்டும்.

பங்களாதேஷ் மக்களது பிறப்புரிமையான சுதந்திர உரிமை ஜனநாயக உரிமையை பாகிஸ்தான் ராணுவ வெறியர்கள் தங்களது காலில் போட்டு மிதித்து நாசப்படுத்தியிருப்பதால் எழுந்த பிரச்னையே இது என்பதை மக்கள் உணரவேண்டும்.

பங்களாதேஷ் மக்கள் விடுதலை அடைவதா, அதற்காக அந்த $7\frac{1}{2}$ கோடி மக்களும் நடத்திவரும் வீரமிகுந்த துயர மிகுந்த போராட்டம் வெற்றியடைவதா அல்லது அவர்கள் அனைவரும் அமெரிக்க ஏகாதிபத்தியக் காலனி ஆதிக்கக்காரர்கள் வழங்கும் ராணுவ உதவியுடன் யாகியாகானின் படுகொலைக்கு இலக்காகி சின்னஞ்சின்னமாக வெட்டுண்டு சித்திரவதைக் குள்ளாகி மடிந்து மண்ணோடு மண்ணாவதா என்பதுதான் இன்று எழுந்துள்ள பிரச்னை. இந்திய-பாக் யுத்த மூண்டால், அதில் மேலோங்கி நிற்கும் பிரச்னை ஏழரைக்கோடி வங்காள மக்களின் விடுதலைப் பிரச்னையாகும்.

வங்கம் வீழ்ந்தால், அதன்பின் இந்த உபகண்டத்திலே சுதந்திர வாழ்வேது? சுதந்திர மக்களது அரசுரிமை, தாங்கள் விரும்பும் அரசை, ஆட்சியை தேர்ந்தெடுத்துக்கொள்ளும் சுய நிர்ணய உரிமை அத்துடன் படுகுழிக்கு போய்விடும் பேரபாயம் இன்று ஏற்பட்டுள்ளது!

இப்படிப்பட்ட இந்த சுதந்திரப் பிரச்னை டெல்லியிலேவீற்றிருக்கும் இன்றைய அரசாங்கத்தின் சொந்தப் பிரச்னை அல்ல; அரசாங்கம் மட்டுமே அக்கறை செலுத்த வேண்டிய பிரச்னை அல்ல.

யுத்தம் என்பது வருமானால், அது தோன்றியதற்குக் காரணமாக உள்ள பிரச்னை இந்த நாட்டின் ஜனநாயக இயக்கத்திற்கு நேரடியாக சம்பந்தபட்டபிரச்னையாக, மேற்குப் பாகிஸ்தானில் ஜனநாயக உரிமைக்காகப் போராடிக்கொண்டிருக்கும் மக்கள் உள்ளிட்ட இந்த உபகண்டத்திலுள்ள சகல மக்களின் ஜனநாயக பிரச்னையாக உள்ளது.

எனவேதான், பங்களாதேஷ் மக்களின் விடுதலைப் போராட்டத்திற்கு சகல விதமான உதவிகளும் புரிவது இந்திய மக்களாகிய நம்முடைய கடமையாகும். அவ்வாறு உதவி செய்து இந்த யுத்தம் பங்களாதேஷ் மக்களின் வெற்றியிலும் பங்களாதேஷ் மக்களது கரங்களின் மூலம் ராணுவ சர்வாதிகாரத்தைத் தவிடு பொடியாக்கும் வகையிலும் முடியச் செய்வதை இந்திய மக்கள் தமது கடமை என்று உணர வேண்டும் என இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தலைமைக் குழு தனது அறிக்கையில் வேண்டிக்கொண்டுள்ளது. (அறிக்கையின் முழு விபரம் பின் வெளியாகும்)

---

# விலைஏற்றத்தை எதிர்த்து

## நாடெங்கும் இயக்கம் தொடங்குகிறது

### தொழிற்சங்கத் தலைவர்கள் கூட்டறிக்கை

புதுடெல்லி, நவ. 20—

பொது மக்கள் உபயோகிக்கும் எல்லாப் பொருள்களும் பிரமிப்பூட்டும் விதத்தில் விலை ஏறி வருவதைக் கட்டுப்படுத்த வேண்டுமென்று சி. ஐ. டி. யூ., ஏ. ஐ. டி. யூ. சி., எச். எம். எஸ். ஆகிய மூன்று தொழிற்சங்க அமைப்புகளும் அரசாங்கத்தைக் கோரியுள்ளன. இதற்காக 7 அம்சத் திட்டம் ஒன்றை நிறைவேற்றக் கோரி அவை கூட்டு இயக்கம் நடத்துகின்றன.

இந்த இயக்கத்தையொட்டி நாடெங்கும் பொதுக் கூட்டங்களும், ஆர்ப்பாட்டங்களும் அணிவகுப்பும் நடத்தப்படும். இவற்றைத் தொடர்ந்து அவசியமானால் பொது வேலைநிறுத்தம் செய்யப்படும். இவற்றிற்கான தேதி பின்னர் அறிவிக்கப்படும்.

இந்தக் கிளர்ச்சி திட்டத்தை நேற்று கூட்டாக நடத்திய பத்திரிகையாளர் கூட்டத்தில் பி. ராமமூர்த்தி (சி.ஐ.டி.யூ.) சதிஷ்லூம்பா (ஏ. ஐ. டி. யூ. சி.) வசந்த குல்கர்னி (எச். எம். எஸ்) ஆகியோர் அறிவித்தனர்.

மூடப்பட்ட தொழிற்சாலையைத் திறக்கக்கோரியும் போனஸ் கிராஜுவிடி கோரிக்கைகளுக்காகவும் ஒரு வாரத்துக்கு தனியான நாடு தழுவிய இயக்கம் ஒன்று டிசம்பர் 5-ம் தேதி முதல் நடைபெறும் என்றும் அறிவித்தனர்.

விலைகள் சம்பந்தமாக அரசாங்கத்தின் கடன் கொள்கையும் மற்ற நடவடிக்கைகளும் பலன் அளிக்கவில்லை என்றும் இத்தொழிற்சங்கத் தலைவர்கள் கூறினர்.

உணவு தானியம் மற்ற அத்தியாவசியப் பொருள்கள், தொழிற்சாலைகளுக்கான மூலப் பொருள்களின் மொத்த வியாபாரத்தை அரசு மேற்கொள்ள வேண்டும் என்று அவர்கள் கோரினர். இந்நடவடிக்கையை மேற்கொள்ளும் வரை சேமிப்பு, வினியோகம் விலைகள் ஆகியவற்றை அரசு கட்டுப்பாடு செய்யவேண்டும் என்றும் சரக்குகளைச் சேமித்து வைப்பதற்கு கடன் கொடுப்பதை நிறுத்தி வைக்க வேண்டும் என்றும் அவர்கள் கோரினர்.

எல்லா வர்த்தக சூதாட்டங்களுக்கும் உடனே தடை விதிக்குமாறு அவர்கள் கோரியுள்ளனர்.

---

# போலீஸ் காவலில் இருந்தவர் சாவு!

## ஆத்திரமடைந்தவர்கள் மீது போலீஸ் சுட்டதில் மேலும் இருவர் பலி!

கோவில்பட்டி, நவ. 20—

திருநெல்வேலி மாவட்டம் சங்கரன் கோவில் அருகே உள்ள கரிவலம்வந்தநல்லூர் போலீஸ் நிலையத்தின் முன்பு ஆர்ப்பாட்டம் செய்த பொதுமக்கள் மீது போலீஸ் துப்பாக்கியால் சுட்டனர் இதனால் இருவர் ஸ்தலத்திலேயே கொல்லப்பட்டனர்: பலர் படுகாயமுற்றனர்.

இச்சம்பவம் பற்றிய விவரம் வருமாறு:—

போலீசாரால் கைது செய்யப்பட்டு லாக்கப்பில் வைக்கப் பட்ட கந்தசாமி என்பவர் திரும்ப உயிருடன் வரவில்லை. இவர் மீது திருட்டுக் குற்றம் சுமத்தி லாக்—அப்பில் அடைத்திருந்தனர்.

அங்கு நேற்று முன் தினம் இரவு கந்தசாமி தமது வேட்டியை ஜன்னலில் மாட்டி தூக்குப்போட்டு தற்கொலை செய்து கொண்டாரெனவும் போலீஸார் கூறுகின்றனர்.

கந்தசாமி மரணத்தில் மர்மம் இருப்பதாக சந்தேகப்பட்டு ஆத்திரமுற்ற பொது மக்கள், போலீஸ் நிலையத்தின் முன் கூடிநின்று ஆர்ப்பாட்டம் செய்தனர்.

அச்சமயம், ஆர்ப்பாட்டம் செய்த பொதுமக்கள் மீது போலீசார் துப்பாக்கியால் சுட்டனர். இதனால் இருவர் கொல்லப்பட்டனர்; பலர் படுகாயமுற்றனர்.

---

விருதையில்

# கல்லூரி மாணவர் போராட்டம்!

விருதுநகர், நவ. 20—

விருதுநகர் செந்திக்குமார நாடார் கல்லூரியில் 17-ந் தேதி முதல் தமிழில் பாடம் படிக்கும் மாணவர்களுக்கு ஆதரவாக வேலைநிறுத்தம் செய்துள்ளனர்.

அவர்களின் நியாயமான போராட்டத்திற்கு தனது பூரண ஒத்துழைப்பையும் ஆதரவையும் இந்திய மாணவர் சங்கம் அளிக்கும் என்று சங்கத்தின் விருதைக் கிளை அறிவித்துள்ளது,

தமிழில்படிக்கும் புதுமுக வகுப்பு, பட்டப் படிப்பு மாணவர்களுக்கு முறையே "பாடப் புத்தகச் செலவிற்கு ரூ. 50, ரூ. 180 கொடுப்பதாக தமிழக அரசு அறிவித்திருந்தது. ஆனால் பருவங்கள் (டெர்ம்) இரண்டும் கழிந்தும் பாடப் புத்தகச் செலவிற்குதரப்படும் என அறிவித்த பணம் இன்னும் தரப்படவில்லை.

எனவே இது குறித்து 12—10—71 அன்று அடையாள வேலைநிறுத்தம் ஒன்று செய்தும் முதல்வர் கருணாநிதிக்கு தந்தி ஒன்றையும் அனுப்பியிருந்தனர். அதற்கு எந்தவித பதிலும் வரவில்லை. மீண்டும் 8—11—71 அன்று பல்கலைக் கழக துணைவேந்தர் அவர்களுக்கும், கல்வி அமைச்சர் அவர்களுக்கும் பதிவுத் தபால் மூலம் மாணவர்களது கோரிக்கையைத் தெரிவித்து, நவம்பர் 16ந் தேதிக்குள் பதில் தெரிவிக்கும்படி வேண்டியிருந்தனர். அவர்களிடமிருந்து இதுவரை எந்தவிதப் பதில்களும் வராததால், மாணவர்களது கோரிக்கையை அலட்சியப் படுத்திய அரசை எதிர்த்துப் பாடப் புத்தகப் பணம் முழுவதும் தரும்வரை மாணவர்கள் தொடர்ந்து போராட முடிவு செய்துள்ளனர்.

---

## டிரான்ஸ்போர்ட் முதலாளி வீட்டு முன் தோழர் மன்னூர்சாமி மூன்றும் நாள் உண்ணாவிரதம் !

மதுரை இந்திரா காங்கிரஸ் பிரமுகரான ஆர். எம். வீரபத்திரத் தேவருக்குச் சொந்தமான சுதந்திரம் டிரான்ஸ்போர்ட்டில் பணியாற்றும் 42 தொழிலாளர்களின் நியாயமான கோரிக்கைகளை ஏற்க மறுக்கும் நிர்வாகத்தின் அகம்பாவத்தை எதிர்த்து மதுரை மோட்டார் தொழிலாளர் சங்கத்தின் செயலாளர் தோழர் எஸ். மன்னூர்சாமி மூன்றாவது நாளாக இன்றும் தொடர்ந்து உண்ணாவிரதம் இருந்துவருகிறார். உண்ணாவிரதத்தை தோழர் எம். முனியாண்டி துவக்கி வைத்தார்.

### தலைவர்கள் சென்று பார்த்தனர்

உண்ணாவிரதம் இருக்கும் தோழர் எஸ். மன்னூர்சாமியை தமிழ் மாநில சி. ஐ. டி. யூ. துணைத்தலைவர் தோழர் ஏ. பாலசுப்ரமணியம், தமிழ்நாடு விவசாயிகள் சங்கத்தின் துணைத் தலைவர் தோழர் என். சங்கரய்யா, சி. ஐ. டி. யூ. பொருளாளரும், மதுரை நகர் மார்க்சிஸ்ட் கட்சி செயலாளருமான தோழர் வி. கார்மேகம், மாநகராட்சிமன்ற உறுப்பினர் தோழர் வீ. வீரபத்திரன் ஆகியோர் சென்று பார்த்துவந்தனர்.

### மின்தொழிலாளர் ஆதரவு ஆர்ப்பாட்டம்

தமிழ்நாடு மின் வாரியத் தொழிலாளர்கள், உண்ணாவிரதம் இருக்கும் இடத்திற்கு வந்து. தொழிலாளர்களின் கோரிக்கைக்கு ஆதரவாகவும் நிர்வாகத்தின் பிடிவாதத்தைக் கண்டித்தும் ஆர்ப்பாட்டம் செய்தனர்.

இந்த ஆர்ப்பாட்டத்தில் பல தோழர்கள் உட்பட கலந்து கொண்டனர். மாலையில் அப்பகுதியில் உள்ள பெண்கள் வந்து பார்த்து உண்டியல்களில் நிதி அளித்தனர்.

---

**ஊரைஏமாற்றி-உடல்வளர்ப்போரை எதிர்த்து உரிமைக்களத்திலே உதிரஞ்சிந்திய வீரர்கள் புதிய போராட்ட திட்டங்கள் தீட்டிட கூடுகிறார்கள்சேலம்மாநகரிலே நவ.25-28ல் மாநாடு**

# தீக்கதிர்

## ஐ.நா.வில் ஒடுக்கப்பட்ட நாடுகளின் உறுதி மிக்க குரல்!

மக்கள் சீனத்தின் ஐ.நா. பிரதிநிதிக் குழுவின் தலைவர் தோழர் சியோ-குவான்-குவா, தன்னுடைய முதல் பேச்சிலேயே அனைவரையும் கவர்ந்து விட்டார்.

அவர் பேச்சில் பின் தங்கிய நாடுகளின் குரல் ஒலித்தது. அவர் பேச்சு ஏகாதிபத்திய வாதிகளை குலை நடுங்கச் செய்துள்ளது. ஆச்சரியமில்லையல்லவா?

இது அமெரிக்கப் பிரதிநிதி திரு ஜார்ஜ் புஸ் அவர்களை கதிகலங்கச் செய்துள்ளது. ஏனெனில் சியோவின் பேச்சு வழக்கமாக ஐ.நா.வில் பேசும் பேச்சாக இல்லை. திரு. புஸ்ஸின் கருத்தில் அது வரவேற்கத் தக்கதாக இல்லை.

ஐ.நா. சபையில் மக்கள் சீனம் தனக்கு உரிய இடத்தை பெறமுடியாதபடி தடுப்பதற்கு கடந்த 22 ஆண்டுகளாக அமெரிக்கா வரிந்து கட்டிக் கொண்டு நின்றது என்பதை யாரும் மறந்துவிட முடியாது. நிக்சன் சீனாவுக்கு புனித யாத்திரை செல்வதின் மூலம் இதைக் கழுவிவிட முடியாது அல்லவா?

''மூன்றாவது உலக மக்களின் ஆதரவுக் கொள்கை நிச்சயம் மக்கள் சீனத்திற்கு ஐ.நா. சபையின் உள்ளேயும், வெளியேயும் செல்வாக்கை வளர்க்கும்.

'வீட்டோ பவரை' எப்போதும் தங்கள் கையில் மேலைய ஏகாதிபத்திய வல்லரசு நாடுகள் மக்கள் சீனமும் தங்கள் கோஷ்டியில் சேரும். சிறு நாடுகளை ஆட்டிப் படைக்கும் தம்முடைய சாகசங்களுக்கு அணை நிற்கும் என்று எதிர்பார்த்தால் ஏமாற்றமடைய வேண்டியதுதான். மேலைய ஏகாதிபத்திய நாடுகள் தங்களின் ஊதுகுழலாக மக்கள் சீனம் இருக்கும் என்று எதிர்பார்த்ததில் மண் விழுந்தது.

மக்கள் சீனம், இதுகாறும் ஒடுக்கப்பட்ட ஆசிய ஆப்ரிக்க லத்தீன் அமெரிக்க நாடுகளது மக்களின் குரலைத் தான் ஐ.நா. சபையில் உறுதியாக ஒலிக்கும் என்பது சியோவின் பேச்சில் தெளிவாயிற்று அவர்களின் நியாயமான கோரிக்கைகளுக்கு முழு ஆதரவு தரும் என்பது தெளிவாயிற்று.

பாதுகாப்புச்சபையில் 'வீட்டோபவர்' வேறு மக்கள் சீனத்திற்கு இருக்கிறது. எனவே பெரும்பாலான நாடுகளான, இதுகாறும் ஒடுக்கப்பட்ட மூன்றாம் உலக நாடுகளின் ஆதரவுடனும், 'வீட்டோ'பவருடனும் மக்கள் சீனம் ஜாம், ஜாம் என்று உலக நாடுகளில் பவனி வரப் போகிறது.

எனவே அமெரிக்கப் பிரதிநிதி திரு புஸ் மக்கள் சீனப் பிரதிநிதி திரு. சியோவின் பேச்சை வெறும் வெற்று வேட்டு என்று கூறி ஏமாற வேண்டாம். அமெரிக்க ஏகாதிபத்தியச் சதிகளை அம்பலப்படுத்துவதில் மக்கள் சீனம் உறுதியாகச் செயல்படும் என்பதில் சந்தேகம் வேண்டாம்.

## அன்னிய செலாவணி மோசடி ஆண்டுக்கு ரூ 240 கோடி

### ஆய்வுக்குழு அறிக்கை

புதுடெல்லி, நவ. 20—

கள்ளக்கடத்தல், வெளி நாட்டுப் பயணம், ஏற்றுமதி, இறக்குமதிப் பயணங்களில் தில்லுமுல்லு ஆகியவற்றின் மூலம், ஆண்டுதோறும் ரூ. 240 கோடி பெறுமான அன்னியச்செலவாணி நஷ்டமாகிறது என்று ஆய்வுக் குழு அறிக்கையொன்று பார்லிமெண்ட்டின் இருசபைகளிலும் தாக்கல் செய்யப்பட்டது.

ஏற்றுமதி இறக்குமதி சம்பந்தப்பட்ட பட்டியல்களில் தில்லுமுல்லு செய்வதைக் குற்றமாக்கவேண்டுமென்றும் — அன்னியச் செலாவணி மோசடி செய்யப்படுகிறதோ, அதற்கு 5 மடங்கு அபராதம் விதிக்கவேண்டும் என்றும் குழு யோசனை கூறியுள்ளது.

### வரி விதிக்கவேண்டிய தேவையில்லை

இவ்வளவு மோசடியைத் தடுத்துவிட்டால்—இந்த வருடம் ஜூன் மாதம், மக்கள்மீது போட்ட ரூ. 220 கோடி வரியைப் போட்டிருக்கவேண்டிய அவசியமே இருக்காது.

அதனால் விலைவாசிகளும் கட்டணங்களும் மேலும் ஏறவேண்டிய அவசியமிருந்திருக்காது அல்லவா!

## கதிர் அடிக்கும் இயந்திரமா? உயிர் குடிக்கும் தந்திரமா?

சென்னை, நவ. 18—

கதிரடிக்கும் மின் யந்திரம் ஒன்றை, அமெரிக்க உதவி நிபுணர் மிஸ்டர் ரிச்சர்டுசன் கண்டுபிடித்திருக்கிறார்.

அந்த யந்திரம் 8 மணி நேரத்தில் 4 டன் நெல்லை (2 ஏக்கர்) கதிரடிக்கும்.

5 குதிரைச் சக்தி மின்சார மோட்டார் அந்த யந்திரத்தை இயக்குகிறதாம்.

நிலமற்ற விவசாயிகளுக்கு நிலம் கிடைக்காத இக்காலத்தில்— இந்த யந்திரம் கிராமங்களுக்குள் நுழைந்தால், விளைவு என்னவாக இருக்கும்?

கதிர் அடிக்கும் தொழில் புரிந்து, கூலி ஜீவனம் செய்யும் விவசாயத் தொழிலாளர்களுக்கு, கதிர் அடிப்பு வேலை பறி போகும் அல்லவா!

ஏற்கெனவே உழுபடை இயந்திரமான டிராக்டர்கள் வந்து, ஏர் பிடிக்கிறவர்களின் வேலையைச் சன்னம் சன்னமாக ஒழித்து வருகிறது. இப்போது கதிர் அடிக்கவும் மிஷின் வருகிறது.

இதெல்லாம், கூலி வேலை செய்யும் மக்களில் பெரும்பாலாராக உள்ள ஹரிஜன மக்களை எவ்வளவு பாதிக்கும்?

ஹரிஜன சேவை என்பது இதுதானா? பிற்பட்டோர் நலம் என்பதும் இதுதானா? இது கதிர்களை அடிக்கும் மிஷினா? குடிகளை ஒழிக்கும் எமனா?

## இந்தியாவின் உணவு உற்பத்தி 11 கோடியே 20 லட்சம் டன்

புதுடில்லி நவ 16—

1971-72ம் ஆண்டில் இந்தியாவின் உணவு தானியங்களின் உற்பத்தி 11 கோடியே 20 லட்சம் டன்னாக இருக்கும் என்று மத்திய விவசாய ராஜாங்க மந்திரி ஷிண்டே கூறினார்.

போதிய விளைச்சல் ஏற்பட்டிருப்பதால் அமெரிக்காவிலிருந்து பி.எல். 480 இறக்குமதி நின்று விடும். இது நிச்சயம் எனறும் ஷிண்டே கூறினார்.

இவ்வளவு உற்பத்தி ஆகியுள்ளதே தானிய விலைகள் குறையுமா என்று ஒரு கேள்வி எழுப்பப்பட்டபோது மந்திரி மவுனமானார்.

## இந்திய மாணவர் சங்க கிளை கூட்டம்

பாளையங்கோட்டை, நவ. 18 —

நவம்பர் 12-ம் நாளன்று தோழர் திருமலை குமாரசாமி தலைமையில் இந்திய மாணவர் சங்க பாளையங்கோட்டை கிளை கூடியது. மாவட்டச் செயலாளர் தோழர் குணராஜ் பிரச்சனைகளை விளக்கிப் பேசினார். தோழர்கள் காவிராஜன் தலைவராகவும். திருமலை குமாரசாமி உதவி தலைவராகவும், முருகன் செயலாளராகவும், ஐய்யனார் உதவிச் செயலாளராகவும், மணி கமிட்டி உறுப்பினராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

1) வீரம் செறிந்த போராட்டம் நடத்தி வெற்றி பெற்ற சேவியர் கல்லூரி மாணவர்களுக்கு வாழ்த்துத் தெரிவிக்கப்பட்டது. மாணவர் போராட்டத்தில் மாணவர்களுடன் இருந்து போராட்டத்தை முன்னின்று நடத்திய திரு. கனகராஜுக்கு கல்லூரி மாணவர் தலைவர் தேர்தலில் ஆதரவு தருவதாக முடிவு செய்யப்பட்டது.

## ஆசிரியருக்கு வரையும் மடல்

## கூட்டுறவு சங்கத் தலைவரின் ஆணவமும்

### கூட்டுறவுத்துறை அதிகாரிகளின் அலட்சியமும்

ஐயா,

எங்கள் பகுதியில் உள்ள சுக்காலியூர் கூட்டுறவு விவசாய கடன் சங்கத்தில் 1—2—68 முதல் எழுத்தராக ஆர். சுப்பிரமணியன் பணிபுரிந்து வந்தார். பின்னர் அவர் 1-7-69 தேதி முதல் சங்கத்தின் மூலமாக கூட்டுறவு மேற்பார்வையாளர் பயிற்சிக்கு தஞ்சைக்கு நிர்வாகத்தினரால் அனுப்பப்பட்டார். அவர் 13—6—70ம் தேதி பயிற்சி முடிந்து வந்த பின் தொடர்ந்து வேலைசெய்ய சங்கத் தலைவர் எஸ். பி. கருப்பணன் அனுமதிக்கவில்லை, பஞ்சாயத்துத் தலைவர் தேர்தலில் தனக்கு ஆர். சுப்பிரமணியன் வேலை செய்யவில்லை என்பதால் வேலை தர முடியாது எனக்கூறிவிட்டார். உடன் ஆர். சுப்பிரமணியன் தமிழக கூட்டுறவு சங்க ஊழியர்கள் சங்கத்தின் (மதுரை) மூலமாக லேபர் ஆபீஸரிடம் மனு தாக்கல் செய்தார். லேபர் ஆபீஸர், தலைவர் வேலைதர மறுப்பது சட்ட விரோதமானது என எடுத்துக்கூறியும், எஸ். பி. கருப்பணன் வேலைக்கு எடுத்துக்கொள்ள மறுத்ததால் தற்பொழுது மதுரை லேபர் கோர்ட்டில் வழக்கு நடைபெற்றுவருகிறது.

கூட்டுறவு சங்க அங்கத்தினர்கள் ஆகிய நாங்கள் 87 பேர் கையெழுத்திட்ட மனுவில், திரு ஆர். சுப்பிரமணியனுக்கு எங்கள் சங்கத்தில் வேலைதரமறுப்பது அதிகாரத்தை துஷ்பிரயோகம் செய்வது என்றும், மேற்படி வழக்கிற்கு சங்கப் பணத்தில் எதுவும் செலவிடக் கூடாது என்றும், இந்த வழக்கு நடத்துவதை ஆட்சேபித்து—மாநிலப் பதிவாளர், துணைப்பதிவாளர், திருச்சி மாவட்ட கூட்டுறவு மத்திய வங்கி ஆகியோருக்கு 17—8-71-ம் தேதி அனுப்பி வைத்தோம்.

இன்று வரை எஸ். பி. கருப்பணனின் அடாத செயலைத் தடுத்து நிறுத்த கூட்டுறவுத் துறை அதிகாரிகள் எந்த விசாரணையோ, நடவடிக்கையோ எடுக்கவில்லை; இது எஸ். பி. கருப்பணின் தான்தோன்றித்தனமான நடவடிக்கைக்கு மறைமுகமாக ஊக்கம் தருவதாக உள்ளது கடந்த 5—11—71-ம் தேதி எங்கள் பகுதியில் நடந்த மனு நீதி திட்ட அதிகாரிகளிடமும்- இதுவரை நடவடிக்கை எடுக்காதது குறித்து - உடன் நடவடிக்கை எடுக்கக் கோரி மனுகொடுத்துள்ளோம்.

சங்கத் தலைவர் எஸ். பி கருப்பணன் போலி சோஷலிசம் பேசும் இந்திரா காங்கிரஸின் கரூர் தாலுகாவின் முக்கிய பிரமுகரில் ஒருவர். இவர் பஞ்சாயத்து தலைவரும், கள்ளுக்கடைக்காரருமாவார். எஸ். பி. கருப்பணன் பயிற்சிக்கு ஆர். சுப்பிரமணியனை அனுப்பிய பின் காளியப்பன் என்பவரை 1969-ம் வருடத்திலும், தற்போது ஆர். சுந்தரராசன் என்பவரை நவம்பர் 71-லும் பணியாளராக நியமித்திருப்பது எந்த வகையிலும் நியாயமில்லையென்று அனைவரும் பேசுகிறார்கள். அத்துடன் லஞ்சம் லாவண்யம் நடந்திருக்கும் என்று பொதுமக்கள் பேசிக்கொள்கிறார்கள். இதுமாதிரி பொது மக்களுக்கு நன்மை செய்ய வேண்டிய பொறுப்புகளில் இருந்து கொண்டு தன் வசதியைப் பெருக்கி கொள்வதற்கு செயல்படும் எஸ், பி. கருப்பணனின் நடவடிக்கையை இனியும் காலதாமதம் செய்யாமல் கூட்டுறவு மேல் அதிகாரிகள் தலையிட்டு இந்த மேற்படி தவறான நடவடிக்கைகளை தடுத்து நிறுத்துவார்களா?

எஸ். எம். பழனியப்பன்,
சுக்காலியன்
எம் சுப்ரமணியம்,
செட்டிபாளையம்.

## சென்னையில் ஸ்டீல் ரோலிங் மில் தொழிலாளர் வேலை நிறுத்தம்

சென்னை, நவ. 18—

திருவொற்றியூர் (அன்டு இன்டஸ்ட்ரீஸ் என்ற கம்பெனியில் 11-11-71ல் முக்கிய தொழிலாளர்கள் 6 பேர்களை கம்பெனிக்குள் அனுமதிக்கவில்லை. உடனே தொழிலாளர்கள் வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டனர் ஒற்றுமையுடன் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்வதை கண்ட முதலாளி, வேறு வழியின்றி நான் எந்த தொழிலாளியையும் வேலை நீக்கம் செய்யவில்லை. ஆனால் 2 தொழிலாளிகளை மட்டும் சஸ்பெண்ட் செய்து இருக்கிறேன். அவர்களைத் தவிர மற்றவர்கள் வேலைக்கு வரவில்லையானால் அனைவரையும் வேலை நீக்கம் செய்வோம் என நோட்டீஸ் ஒட்டினார்

முதலாளியின் பயமுறுத்தல் தொழிலாளர்களை மேலும் உறுதிப்படுத்தியுள்ளது. 12-11-71ல் லேபர் அதிகாரி முன்னிலையில் வருவதாக ஒத்துக்கொண்ட முதலாளிவரவில்லை. 15-11-71 அன்று விசாரணைக்கு வருவதாக ஒத்துக்கொண்டும் வரவில்லை. கருங்காலிகளை கம்பெனிக்குள் வைத்துக் கொண்டும், போலீஸ் உதவியுடன் வெளியாட்களை கம்பெனிக்குள் கொண்டு செல்ல முற்படுகின்றனர். தொழிலாளர்களை கத்தியை காட்டிபயமுறுத்தும் சங்கராணிகளை ஏவிவிட்டு மிரட்டுவதும், சிலர் குடித்துவிட்டு கலாட்டா செய்வதும் தொடர்ந்து நடைபெற்று வருகிறது. இவை அனைத்தும் போலீஸ் முன்னிலையில் நடைபெறுகிறது.

இந்த அக்ரமங்களை கண்டு அப்பகுதி தொழிலாளர்கள் கூட்டு இயக்கத்தை துவக்க திட்டமிட்டு வருகிறார்கள்.

## தி. மு. க ஆட்சியில் மருத்துவமனையில் டாக்டர் இல்லை

தஞ்சாவூர், நவ. 19 —

பூதலூர் பஞ்சாயத்திலுள்ள செங்கிபட்டி மருத்துவமனைக்கு இரண்டு ஆண்டுகளுக்கு மேலாகியும் இன்னும் டாக்டர் போடவில்லை. கம்பவுண்டரும் இல்லை.

இந்த மருத்துவமனை புதிதாகக் கட்டப்பட்டதில்லை. இந்தப் பகுதியிலே மிகப் பழைய மருத்துவ மனையாகும் இந்தப் பகுதியிலுள்ள முக்கியமான ஊர்களில் செங்கிபட்டியும் ஒன்று. எனவே இந்நிலை, பொது மக்களுக்கு மிகவும் சிரமத்தை அளித்து வருகிறது.

மேலும் இருக்கும் மருத்துவமனை ஊழியர்களுக்கும், கடந்த ஏப்ரல் மாதம் முதல் எட்டு மாதங்களாகச் சம்பளம் கொடுக்கவில்லை. எனவே அவர்களும், இனிநிலைமை இவ்வாறே நீடித்தால் தாங்களும் காலவரையறையற்ற உண்ணாவிரதம் இருக்கப் போவதாக அறிவித்துள்ளனர்.

## தென்காசியில் மின்சாரத் தொழிலாளர் மத்திய அமைப்பு தினக் கூட்டம்

தென்காசி, நவ. 19—

தமிழ்நாடு மின்குழு ஊழியர் சங்கத்தின், நெல்லை திட்ட ஊழியர்கள் சார்பில் மத்திய அமைப்பு தினக் கூட்டம் நவ 15-ம் தேதி இங்குள்ள திரிகூடராச வித்தியாசாலையில் நடந்தது. கூட்டத்திற்கு திரு. முத்தையா தலைமை வகித்தார். தோழர்கள் பி. புகழும் பெருமாள், சுப்பையா, ஈஸ்வரன், பாப்பசான், திட்டத் தலைவர் எம். வீரப்பன் ஆகியோர் பேசினர்.

மத்திய இந்திராகாந்தி அரசு 8 1/3 சதவீத போனஸ் விகிதத்தை பெரு முதலாளிகளின் நிர்ப்பந்தத்தால் அமுல்படுத்த மறுப்பதைக் கண்டித்தும், சிம்சன் தொழிற் சங்கத் தகராறில் தமிழக அரசின் தொழிலாளர் விரோதக் கொள்கைகளைக் கண்டித்தும், தி. மு. க. சங்கக் குண்டர்களின் தாக்குதலைக் கண்டித்தும், எண்ணூரில் மின்சாரத் தினக் கூலித் தொழிலாளர்களுக்கு 50 பைசா ஆண்டு உயர்வு 1—12—70 முதல் கொடுத்துவிட்டு மற்ற பகுதி தினக் கூலித் தொழிலாளர்களுக்கு 25 பைசாவை 1—6—71-லிருந்து கொடுக்கப்படும் ஓரவஞ்சனையைக் கண்டித்தும் மற்றும் பல தீர்மானங்களும் போடப்பட்டன

## வேலை இல்லா ஆசிரியர்கள் ஊர்வலம் பொதுக்கூட்டம்

குழித்துறை நவ. 19—

குமரி மாவட்டத்தில் பயிற்சி பெற்ற ஆசிரியர்களுக்கு வேலை வாய்ப்பிருந்தும் வேலை கொடுக்காதிருக்கும் கல்வி அதிகாரிகளுடையவும் அரசினுடையவும் செயலை கண்டிக்க நவம்பர் 13-ம் நாள் தக்கலையில் ஊர்வலமும் மாலையில் பொதுக்கூட்டமும் வாலிபதூர் திடலில் ஆர். எஸ். ஜெயகுமார் தலைமையில் பொதுக்கூட்டமும் நடைபெற்றன. சர்வ கட்சி தலைவர்கள் பேசினர்

## போலீஸ் அடக்கு முறைக்கு கண்டனம்

குழித்துறை, நவ. 19—

அருமனை போலீஸ் இன்ஸ்பெக்டர் மாணவர் ஒருவரை நவம்பர் 16ம் நாள் எக்காரணமுமின்றி தகாத முறையில் தாக்கியுள்ளார். இச்செயலைக் கண்டித்து அருமனை போலீஸ் நிலையம்முன் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கண்டன ஆர்பாட்டம் நடத்தி இன்ஸ்பெக்டர் மீது நடவடிக்கை எடுக்க வேண்டியுள்ளது. அருமனை போலீஸ் இன்ஸ்பெக்டர் புகழேந்தியின் அநியாய செயல்கள் பற்றி நடவடிக்கை எடுக்க பலமாதங்களுக்குமுன் கம்யூனிஸ்ட் (மார்க்சிஸ்ட்) கட்சியும், தோட்டத் தொழிலாளர் சங்கமும் கூறி வருகிறது

## மின் தொழிலாளர் மத்திய அமைப்பு முதலாவது நிறைவு நாள் விழா!

சோலையார், நவ. 19—

தமிழ்நாடு மின் தொழிலாளர் மத்திய அமைப்பின் முதலாவது நிறைவு நாள் விழா அத்துடன் இணைக்கப்பட்ட, தமிழ்நாடு மின்சார அணைக்கட்டு தொழிலாளர் சங்கத்தின் சோலையார் கிளையில் நவம்பர் 15-ந்தேதி மாலையில் ஆர்ப்பாட்ட ஊர்வலத்துடனும், பொதுக் கூட்டத்துடனும், சிறப்பான முறையில் நடைபெற்றது. மின் தொழிலாளர்களும், பொதுப்பணித்துறை தொழிலாளர்களும் நூற்றுக்கணக்கான தொழிலாளர்கள் ஊர்வலத்தில் கலந்துகொண்டனர்.

அன்று மாலை பொதுக்கூட்டத்திற்கு தோழர் எம். பி. சோமக்குட்டி தலைமைவகித்தார். பொதுச்செயலாளர் தோழர் ஆர். நாராயணன் சிறப்புரை ஆற்றினார். பின்னர் மத்திய அமைப்பின் பொதுக் குழு உறுப்பினர் தோழர் ஆ. சண்முகவேலு, மத்திய அமைப்பு கடந்த ஒரு ஆண்டில் செய்துள்ள பணிகளைப்பற்றி பேசினார்.

## "தீக்கதிர்" வளர்ச்சி நிதி

பாளப்பாளையம் பி. கே. சென்னியப்பனுக்கும். கங்காபுரம் லட்சுமிக்கும் 1-11-71ல் நடந்த திருமணத்தையொட்டி

சென்னிமலை கட்சிக் கிளைக் காரியதரிசி சி. எஸ். பொன்னுசாமி மூலம் ரூ 5-00.

— நன்றி.

## பாக். ராணுவப் படுகொலைகள் தொடருகின்றன

முஜிப்நகர், நவ. 19—

நேற்று முன்தினம் பங்களாதேஷின் முக்கிய நகரான டாக்காவில் யாஹியாகானின் ராணுவம் ஊரடங்குச்சட்டம் பிறப்பித்தது. விடுதலைப்போராட்ட வீரர்களின் நடமாட்டம் அதிகமாகி வருவதால், அவர்களைப் பிடிக்க இந்த நடவடிக்கை எடுக்கப்பட்டதாம். ஆனால் யாஹியாவின் ராணுவ வெறியர்கள் நிரபராதி மக்களைக் கொன்று குவித்திருப்பதாகத் தகவல் வந்துள்ளது. சுமார் 1000 பேர் வரை படுகொலை செய்யப்பட்டதாகவும், இன்னும் பல ஆயிரம் பேர் கைது செய்யப்பட்டதாகவும் தகவல் வந்துள்ளது.

## குறிப்புகள்

## தினமணியாரின் தேசபக்தி!

சீனாவுடன் எல்லைப் பிரச்னையைப் பேசித் தீர்த்துக் கொள்ளவேண்டும். 'அதுவும் அக்சாய் - சின்' பகுதியை ஒரு பிரச்னையாகக் கருதாமல் பேசித் தீர்த்துக்கொள்ள வேண்டுமென்று ''தினமணி'' தலையங்கம் தீட்டியுள்ளது.

''இண்டியன் எக்ஸ்பிரஸ்'' இன்னும் தெளிவாக ''நேரு அன்றே பாராளுமன்றத்தில் அக்சாய் - சின் என்பது புல் கூட முளைக்காத ஓர் இடம் என்று சொன்னாராம். அப்படிச் சொன்னதின்மூலம் அக்சாய் - சின் பகுதிக்காக சண்டை போடுவது என்பது அவசியமற்றது என்று சொன்னாராம்; அது மட்டுமல்ல; அக்சாய்-சின் பகுதியை விட்டுக் கொடுத்து மாக்மோஹன் எல்லைக் கோட்டை சீன சர்க்காரை ஒத்துக்கொள்ள வைக்கவும் என்று நினைத்தாராம்.

துரதிருஷ்ட வசமாக அன்றைக்கு எதிர்க்கட்சிகள் தேசிய வெறி பிடித்து அதைக் கேட்க மறுத்துவிட்டனவாம். நேரு நினைத்ததுசரியென்று சரித்திரம் நிரூபித்துவிட்டதாம். எனவே, நாம் நமது தவறை உணர்ந்து திருத்திக்கொள்ள வேண்டும்'' என்று எழுதியுள்ளது

வரவேற்கத் தகுந்த மாறுதல்தான். ஆனால் ஒன்றை மீண்டும் ஞாபகமூட்டுவது அவசியம் இந்திய—சீன எல்லைத் தகராறு ஏற்பட்ட காலத்தில், இந்தக் கனவான்கள் உலகில் இல்லாதது மாதிரியும். இன்றைக்குத்தான் ஆகாயத்திலிருந்து குதித்து இந்தியா வந்து இறங்கியிருப்பதுபோலவும் நடிக்கின்றன ''தினமணி''யும், 'இண்டியன் எக்ஸ்பிரஸ்'' ஸும்

அன்றைக்கு தமது தலையங்கங்களில் என்ன எழுதின? சூ! சூ! நாயே! சூ-என்-லாயே என்று நாடு முழுவதும், இந்தப் பத்திரிகைகள் தேசிய வெறி பிடித்து அலைந்து கூப்பாடுபோட்டபோது இவர்களும் சேர்ந்து தாளம் போடவில்லையா? சீனாக்காரன் பாம்பைத் தின்கறான். பல்லியைத் தின்கிறான் என்று ஏசவில்லையா? மா-சே-துங் ஒரு பூதம், ஒரு பிசாசு என்று கார்ட்டூன் போட்டுக் காட்டவில்லையா?

இதையெல்லாம் யாரும் மறந்துவிட வேண்டாம்! ஏனென்றால், இந்திய—சீன நல்லுறவு வேண்டும் என்று இன்றுகூறும் இதே முதலாளித்துவ பட்டாளங்கள் நாளைக்கு வேதாளம் முருங்கை மரத்தில் ஏறுவதுபோல் ஏறிக்கொள்ளலாம்.

அன்று இவர்கள் போட்ட அத்தனை கூப்பாட்டுக்கு மத்தியிலும், கலவரத்திற்கு மத்தியிலும், நிதானமாக தீர்க்கதரிசனத்தோடு, தலை நிமிர்ந்து ''எல்லைப் பிரச்னையை, பேசித்தான் தீர்த்துக்கொள்ள வேண்டும். நம் நாடு பின்தங்கிய நாடு. வருடத்திற்கு 1,000 கோடி ரூபாயை பாதுகாப்புச்செலவுக்காக செலவிடுவதென்பது நம்மால் முடியாது. நாட்டின் நலனைக் கருதி எல்லைப் பிரச்னையில், சண்டையிடுதல் கூடவும் கூடாது'' என்று சொல்லிய ஒரே காரணத்திற்காக இன்றைய மார்க்ஸிஸ்ட் கட்சியின் தலைவர்களை கைது செய்தது சரி என்று இதே தினமணி தலையங்கம் எழுதியதையும் மார்க்ஸிஸ்ட் கட்சியை தடைசெய்ய வேண்டும் என்றும், நாட்டைக் காட்டிக் கொடுப்பவர்களுக்கு இந்நாட்டில் இடமில்லை என்று தலையங்கம் தீட்டியதையும் மறந்துவிட வேண்டாம்!

இன்றைக்கு சீனாவின் அபரிமிதமான வளர்ச்சியும், வியத்நாமில் அமெரிக்காவுக்கு ஏற்பட்ட படுதோல்வியும், நிக்சனை— உலகத்தின் குபேரனை— தினமணியின் பாஷையில், உலகத்தை உய்விக்கவே ''அவதாரம் எடுத்திருக்கும் கலியுகக் கண்ணனை'', தீண்டத்தகாதவன் என்று ஒதுக்கப்பட்ட, கருவிலேயே சிதைக்கவேண்டும் என்று கருதப்பட்ட, அதே சீனத்தின் காலடியில் விழ வேண்டிய பரிதாபகரமான நிலைக்கு தள்ளியுள்ளது அல்லவா?

தினமணியின் லட்சிய நாடான அமெரிக்காவுக்கே இந்த கதி ஏற்பட்டுவிட்டது என்றால். ''அமெரிக்காவின் பக்தரான தினமணியாரும் மாறித்தானே ஆக வேண்டும்.

''சீனாவுடன் பேசித் தீர்த்துக்கொள்ள வேண்டும். அது தான் ராஜதந்திரம்! அதுதான் தேசபக்தி!'' என்று தினமணியின் குரல் மாறுகிறது.

இதுதான் தேசபக்தி என்றால், அன்று—சீனத்துடன் வரிந்துகட்டிக்கொண்டு சண்டை போடப்போன அன்று- எழுதியது— பேசியது— கொக்கரித்தது இந்திய—சீன உறவைக் கெடுத்தது, தேசத் துரோகந்தானே!

—எழிலன்

## கம்யூனிஸ்ட் கட்சி

( மார்க்சிஸ்ட் )

## மாநில மாநாட்டுப் பிரதிநிதி தோழர்களின் கவனத்திற்கு!

சேலம் 1.டவுன் பஸ் நிலையத்திற்கருகிலுள்ள நேரு கலையரங்கில் நவ. 25 முதல் 28 வரை மாநாடு நடைபெறுகிறது.

2. சேலம் ஜங்ஷன் வரும் தோழர்கள் டவுன் பஸ் மூலம் வந்து பஸ் ஸ்டாண்டில் இறங்கி கலையரங்கம் செல்ல வேண்டும்.

3. பிரதிநிதிகளின் உணவுக்கட்டணம் நாளொன்றுக்கு ரூ 3 வீதம், ரூ. 12-ம், பிரதிநிதிக் கட்டணம் ரூபாய் ஒன்றும் ஆக ரூ. 13 செலுத்த வேண்டும்.

4. குளிர்காலமாதலால் பிரதிநிதிகள் படுக்கை, போர்வையுடன் வரும்படி கேட்டுக்கொள்கிறோம்.

வாழ்த்துக்கள்,

மா. க. செயற்குழு.

# ராணுவ ஆட்சிக்கு நியாயம் கற்பிக்க தாய்லாந்து பிரதமரின் கம்யூனிச பூச்சாண்டி

பாங்காக், நவ. 19— ஐ.நா. வில் சீனா இடம் பெற்றதால், தாய்லாந்து நாட்டிலுள்ள சீனர்கள் கம்யூனிசத்திற்குச் சென்று விடும் ஆபத்து ஏற்பட்டிருக்கிறது என்றும், அதன் காரணமாகத்தான் இராணுவப் புரட்சி நடத்தியதாகவும் அந் நாட்டுப் பிரதமர் கிட்டிகாச்சரான், தமது இராணுவப் புரட்சிக்கு குலை நடுக்கத்துடன் நியாயம் கற்பித்துள்ளார். இதை, இன்று அரசு அதிகாரிகள் கூட்டத்தில் பேசுகையில் கிட்டிக்காச்சரான் கூறினார்.

தாய்லாந்தில் கம்யூனிஸ்ட் கட்சியின் வளர்ச்சியைக் கண்டு அவர் கலக்கம் அடைந்துள்ளார்.

தாய்லாந்திலுள்ள கம்யூனிஸ்டுகள், ஆதிக்கம் பெற்றால் நிலைமை மோசமாகிவிடும் என்றும் நாட்டில் ஏற்கனவே நிலவும் பயங்கரவாதிகளின் ஊடுருவல் அதிகரிக்கும் என்றும் இதனால், நாட்டுப் பாதுகாப்புக்கு ஆபத்து ஏற்படும் என்றும் கிட்டிகாச்சரான் பூச்சாண்டி காட்டினார்!

புது அமைச்சரவை பற்றி உடனடியாக தான் அறிவிக்கப் போவதில்லை என்றும் அவர் கூறினார். தமது இராணுவ ஆட்சியின் அலுவல்களை கவனித்துக்கொள்ள நேற்றிரவு 9 உறுப்பினர்கள் கொண்ட குழு ஒன்றை அமைத்தார்.

## கம்போடிய தலைநகருக்கு 12 கி. மீ. தொலைவில் விடுதலை படைகள்

நாம்பென், நவ. 18— கம்போடியாவின் தலைநகரான நாம்பென் மீது விடுதலை படைகள் தாக்குதல் கடுமையாகியுள்ளதாக பெரும்மை அரசு வட்டாரத் தகவல்களே கூறுகின்றன. தலைநகரின் மேற்கு, தெற்கு, கிழக்கு, வடக்கு கிழக்கு பகுதிகளில் கம்யூனிஸ்டுகள் நிலை கொண்டு தாக்குதலைத் தீவிரப்படுத்துவதாக பெரும்மை அரசின் அதிகாரியே அறிக்கை விடுத்துள்ளார்.

நாம்பென்னுக்கு 35 கி. மீ கிழக்கிலுள்ள பிரேவெங்க் மீது விடுதலைப் படைகள் பிரம்மித் தாக்குதல் தொடுத்துள்ளன. இப்போது நாம்பென்னுக்கு 12 கி மீ தொலைவில் விடுதலைப் படைகள் நிற்கின்றன.

## பென்ஸ் கார் சோசலிசம்

சில நாட்களுக்கு முன்பு, உவைத்திலேயே மிக்க விலை உள்ள கார் ஒன்று இறக்குமதி செய்யப்பட்டது என்ற தகவல் கிடைத்தது. 12 பேர் உட்காரக்கூடிய 'குளு குளு' வசதி செய்யப்பட்ட கார்...

அலைநகரத்திற்கு இந்தக்காரை கொண்டுவருவதற்காகத் தனி ரயில் பெட்டி செய்யப்பட்டதாம்.

—மாலை இந்தியன் 71. அக். 21

இதனை வெளியிட்ட ஏடு, இந்திரா காங்கிரஸ் எம். பி. சந்திரசேகரை ஆசிரியராகக் கொண்டது.

ஆம், அங்கேயே சோசலிச சாயம் வெளுக்கத் துவங்கிவிட்டது.

## தமிழில் மணி ஆர்டர் பாரம்!

புதுடெல்லி, நவ. 19— மணி ஆர்டர் பாரங்கள் இனி தமிழிலும் அச்சிடிக்கப்படும். இத்தகவலை மத்திய அமைச்சர் திரு. எச். என். பகுகுணா இன்று நாடாளுமன்றத்தில் தெரிவித்தார்.

கிராமங்களிலேயே பெரும்பாலும் சாதாரண மக்களால் உபயோகிக்கப்படும் மணியார்டர் பாரங்கள் ஆங்கிலம், இந்தி ஆகிய மொழிகளுடன் இனி தமிழ், தெலுங்கு போன்ற முக்கிய மொழிகளிலும் வெளியிடப்படும்.

இது தவிர ஒரு மாநிலத்திலிருந்து மற்றொரு மாநிலத்திற்குச் செல்லும் வேறுபல விண்ணப்பங்கள் தற்போது ஆங்கிலம், இந்தி மொழிகளில் மட்டுமே வெளியிடப்படுகின்றன. இனி அவ் விண்ணப்பங்களில் தமிழ் போன்ற பிராந்திய மொழிகளும் இருக்கும்.

அவர் மேலும் கூறுகையில் மாநிலத்திற்குள்ளேயே உபயோகிக்கப்படும் சிறிய விண்ணப்பங்கள், தமிழ் ஆங்கிலம் இந்தி ஆகிய மூன்று மொழிகளுடன் அச்சிட முடியாவிட்டால், ஒவ்வொரு மொழியிலும் தனித்தனியே வெளியிடப்படும் என்று குறிப்பிட்டார்.

# தி. மு. க. பஞ்சாயத்துத் தலைவரின் சர்வாதிகாரம்

## தி.மு.க. துணைத்தலைவர் வெளி நடப்பு!

மதுரை, நவ. 19— மதுரை விளாங்குடி பஞ்சாயத்துக் கூட்டத்தில் தலைவரின் சர்வாதிகாரப் போக்கை எதிர்த்து துணைத்தலைவர் வெளிநடப்பு செய்தார். இவ்விருவரும் தி. மு. க வைச் சேர்ந்தவர்கள். அதுபற்றி விபரம் வருமாறு:—

மதுரை வடக்குத் தாலுகா மேற்கு பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்தது விளாங்குடி பஞ்சாயத்து. இதன் தலைவர் திரு. எம். அழகு. துணைத் தலைவர் திரு எஸ். மணி. இருவரும் தி.மு.கழகத்தைச் சேர்ந்தவர்கள்.

இப்பஞ்சாயத்தின் கூட்டம் நவ. 16ந் தேதி தலைவர் திரு. எம். அழகு தலைமையில் நடந்தது.

தலைவர் 8 தீர்மானங்களைப் பிரேரேபித்து அவற்றிற்கு ஆதரவும் அங்கீகாரமும் கோரினார். ஆனால் துணைத்தலைவர் அவற்றை எதிர்த்தார். அத்தீர்மானங்களில் பல ஏற்றுக்கொள்ள முடியாதவை என்று கூறினார்.

சென்னைக்குசென்றதாககூறி ரூ, 45 அபேஸ்

சென்னையில் நடைபெற்ற சீரணி அணிவகுப்பிற்கு பஞ்சாயத்து பில் கலெக்டர் பழனிச்சாமி சென்னைக்கு சென்றதாகவும் அவருக்கு 45 ரூபாய் கொடுக்க கமிஷனர் உத்தரவிட்டுள்ளார் என்றும் சொல்லி இதற்கு அங்கீகாரம் கோரினார் தலைவர்.

இதற்கு துணைத் தலைவர் எஸ். மணி எதிர்த்தார். சென்னையில் நடந்த சீரணி அணிவகுப்பிற்கு விளாங்குடி வட்டாரத்திலிருந்து யாரும் செல்லவில்லை என்றும், சென்னையில் அணிவகுப்பு நடந்த நாளன்று பழனிச்சாமி அவரது வீட்டிலிருந்தாரென்றும் கூறி அத்தீர்மானத்தை ஆட்சேபித்தார்.

அடுத்து விளாங்குடி பள்ளர் புதூரில் 3 கக்கூஸ்கள் கட்டவும் அதற்காக ரூ 6000—ம் அதற்கான கெஸ்டையசனும், 4 மூத்திரப் பிறைகள் அமைக்கவும், அதற்காக ரூ. 3000 ம் அதற்கான கெட்டையசனும் அடங்கிய தீர்மானத்தைப் படித்து அதற்கு ஒப்புதல் கேட்டார் தலைவர்.

இதற்கு, 1970 ஆகஸ்ட் மாதம் முதல் விளாங்குடி பஞ்சாயத்தைச் சேர்ந்த புதிய— பழைய விளாங்குடிகள், சாலை புதூர், பள்ளர் புதூர், கொண்டமாரி, கரிசக்குளம், கடல்நகர், அஞ்சல் நகர், எல் ஐ.சி காலனி, சொக்கன் குளம் ஆகிய பகுதிகளில் சாக்கடை, ரோடு, குடிதண்ணீர், இன்று மராமத்து வேலைகள் செய்வது என்று தீர்மானிக்கப் பட்டது; 18 மாதங்கள் ஆகியும் இதுவரை எந்த வேலையும் நடைபெறாததால் பொது மக்கள் அதிருப்தி கொண்டுள்ளனர்; அந்த வேலைகளை செய்த பின்னர்தான் இந்த தீர்மானங்களைக்கொண்டு வர வேண்டும் என்று கூறி துணைத் தலைவர் எஸ் மணி (தி. மு. க) எஸ் பாண்டி (மார்க்சிஸ்ட்) வி. அம்மாவாசை ஆகியோர் எதிர்த்தனர்.

### வெளிநடப்பு

உடனே, தலைவர் அழகு நீங்கள் ஆமிக்கா விட்டாலும் சும்மா இருங்கள் என்றுகூறி விட்டுத் தன்னிச்சையாக தீர்மானங்களை மினிட் புத்தகத்தில் எழுத ஆரம்பித்தார்.

பஞ்சாயத்து தி.மு.க. தலைவரின் இந்த எதேச்சதிகாரப் போக்கினை எதிர்த்து பஞ்சாயத்துத் துணைத்தலைவர் எஸ். மணி, வி. அம்மாவாசை எஸ். பாண்டி (மார்க்சிஸ்ட்) ஆகிய மூவரும் கூட்டத்தைவிட்டு வெளிநடப்புச் செய்தனர். தலைவரின் சர்வாதிகாரப் போக்கு பற்றி மேல் அதிகாரிகளுக்குப் புகார் செய்துள்ளனர். இந்த நடவடிக்கைகள் மக்கள் மத்தியில் ஒரே பரபரப்பை ஏற்படுத்தியிருக்கிறது.

# திரைப்படச் செய்திகள்




## ராஜா வருகிறார்!

இப்போது ராஜா ஏது? என்று கேட்காதீர்கள். பாலாஜியின் சுஜாதா படக் கம்பெனியார்— தங்கள் வண்ணப்படத்திற்கு 'ராஜா' என்று பெயர் வைத்துள்ளனர். இந்தப் படம் கிறிஸ்மஸ் பரிசாக வரும் என்று தெரிகிறது. சிவாஜியுடன்—ஜெயலலிதா எஸ். வி. ரெங்காராவ், பாலாஜி சந்திரபாபு, சுந்தர்ராஜன் ஆகியோர் நடிக்க— ஏ. எல். நாராயணன் வசனம் எழுதுகிறார் எம். எஸ். விசுவநாதன் இசையமைக்க— சி.வி. ராஜேந்திரன் டைரக்ட் செய்கிறார்.



சிவாஜி கணேசன் கண்கலங்கும் உருக்கமான தோற்றம்
— படம்; '' ராஜா''

## தெய்வம்

கோபுரம் நாடகத்தை பொன் விழா கொண்டாடிய சேஷாத்திரியின் சாந்தி நிகேதன் குழுவினர்— அடுத்து தெய்வம் என்ற நாடகத்தைத் தயாரிக்கின்றனர். பிலஹரி கதை வசனம் எழுதியுள்ளார் இந்த நாடகத்தில் டி. என். சேஷாத்திரி— டைப்பிஸ்ட் கோபு, சரளா ஆகியோர் நடிக்கிறார்கள். டி. என். சேஷாத்திரி-டைபிஸ்ட் கோபு, சரளா ஆகியோர் நடிக்கிறார்கள். இம்மாதம் 20.ந்தேதி மைலாப்பூர் பைன் ஆர்ட்ஸில் அரங்கேற்றமாகிறது.

ஏ. சி. திரிலோகசந்தர் திரைக்கதை வசனம் எழுதி டைரக்ட் செய்கிறார். ஏவி. எம். மில் இதன் படப்பிடிப்பு தொடங்குகிறது.

## ராஜராஜ சோழன்

ஆனந்த் தியேட்டர் உரிமையாளர் ஜி. உமாபதி தயாரிக்கும் சினிமாஸ்கோப் வண்ணப் படத்திற்கு நட்சத்திர தேர்வு முடிந்துவிட்டது.

ராஜராஜ சோழனாக சிவாஜி கணேசன், ராஜேந்திர சோழனாக ஏவி. எம். ராஜன் நடிக்கிறார். மற்றும் முத்துராமன், லட்சுமி, விஜயகுமாரி, நம்பியார், மனோகர், பகவதி, சுருளிராஜன், மனோரமா ஆகியோர் நடிக்கின்றனர்.

இளம் கலைஞர் குன்னக்குடி வைத்தியநாதன் இசையமைக்கிறார். கதை வசனத்தை அரு. ராமநாதன் எழுத, திரைக்கதை டைரக்ஷனை கலைஞர் ஏ பி. நாகராஜன் கவனிக்கிறார்.

## கிழக்கும் மேற்கும்

'சவாலே சமாளி' வெற்றிப் படத்தை தயாரித்த மல்லியம் புரடெக்ஷன்சார் அடுத்து கிழக்கும் மேற்கும் என்ற வண்ண படத்தை தயாரிக்கிறார்கள்.

சிவாஜி கணேசன் கதாநாயகனாக நடிக்கிறார். அவருக்கு 'கிழக்கு மேற்கு' நாடுகளின் நாகரீகத்தை எடுத்துக் காட்டும் வேடம் கொடுக்கப் பட்டுள்ளது. இதனால் இந்த படத்தின் சில காட்சிகளை இங்கிலாந்து, பிரான்ஸ் ஆகிய நாடுகளில் படம் ஆக்க திட்டமிட்டுள்ளார்கள். மல்லியம் ராஜகோபால் கதை வசனம் எழுதி டைரக்ட் செய்கிறார்.

## கௌரவம்

வியட்நாம் மூவிஸின் வண்ணப்படமான கௌரவம் வளரத் தொடங்கியது. சிவாஜி கணேசன் இரட்டை வேடத்தில் நடிக்கிறார். அவருக்கு ஜோடியாக உஷாநந்தினி நடிக்கிறார். வியட்நாம் வீடு சுந்தரம் கதை வசனமெழுதி டைரக்ட் செய்கிறார்.

—செம்மீன், சென்னை.

## நேற்று இன்று நாளை

அசோகனின் வண்ணப்படத்தில் எம். ஜி. ஆருக்கு ஜோடியாக மூன்று கதாநாயகிகள் நடிக்கிறார்கள் மஞ்சுளா-லதா-ஜெயந்தி அந்த மூன்று பேர்கள்.

இம்மாதம் 17ல் முதல் சத்யா படப்பிடிப்பு நிலையத்தில் மீண்டும் படப்பிடிப்பு நடக்கிறது. அசோகன், தேங்காய் சீனிவாசன் வி. கே. ராமசாமி வி. கோபாலகிருஷ்ணன் ஆகியோர் நடிக்கிறார்கள். சொர்ணம் திரைக்கதை வசனம் எழுத— ப. நீலகண்டன் டைரக்ட் செய்கிறார்.

## தாய்மேல் ஆணை

'பாபு' படத்தை தயாரித்த திரிலோகசுந்தர் தமது அடுத்த தயாரிப்பாக 'தாய்மேல் ஆணை' என்ற படத்தை தயாரிக்கிறார். எம். எஸ். விஸ்வநாதன் இசையமைக்க—விஸ்வநாதராய் 'ஒளிப்பதிவை கவனிக்கிறார்.

திரைப்பட விமர்சனம்

## "இன்குலாப் ஜிந்தாபாத்"

### பெயரைப் பார்த்து மயங்காதீர் ! திருத்தல்வாதியின் கைவரிசை !!

''இன்குலாப் ஜிந்தாபாத்'' புரட்சிகரமான பெயரில் வெளிவந்துள்ள ஒரு படம் ஆனால் புரட்சிகரமான இயக்கத்தை கேலி செய்வதும் அவதூறு செய்வதும் தான் இதனுடைய உள்ளடக்கம். குறிப்பாக மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியை அவதூறு செய்வதுதான் இதை தயாரித்தவர்களின் முக்கிய குறிக்கோள் என்பது தெளிவாகத் தெரிகிறது.

கம்யூனிஸ்டுகள், நன்றிகெட்டவர்கள், மனிதாபிமானமில்லாதவர்கள், கம்யூனிஸ்ட் கட்சியில் உண்மையான ஊழியர்களுக்கு இடமில்லை; உட்கட்சி ஜனநாயகமில்லை; கட்சிக்கு பண உதவி செய்யும் சந்தர்ப்பவாதிகளான ஒழுக்கங்கெட்ட பணக்காரர்களுக்குத் தான் உயர்ந்த அந்தஸ்தும் பதவியும் அளிக்கப்படுகிறது. பண பலம், ஜாதி செல்வாக்கு அடிப்படையில்தான் கம்யூனிஸ்ட் கட்சி வேட்பாளர்களை நிறுத்துகிறது. கம்யூனிஸ்டுகளால் நிரபராதிகள் தண்டிக்கப்படுகிறார்கள் கம்யூனிஸ்டுகள் பண்பாடற்றவர்கள். கம்யூனிஸ்டல்லாதவர்கள்தான் பண்பாடும் மனிதாபிமானமும் உள்ளவர்கள். கம்யூனிஸ்ட் எழுத்தாளர்கள் கரடுமுரடாக எழுதக் கூடியவர்கள், கோழைகள். கோமாளிகள், அவதூறு செய்பவர்கள் இப்படி பல்வேறு முறைகளில் கம்யூனிஸ்ட் இயக்கத்தை அவதூறு செய்யக் கூடிய படத்திற்கு தான் இங்குலாப் சிந்தாபாத் என்று பெயர் வைத்துள்ளார்கள்.

கல்லூரி மாணவர்களாக இருந்த ஸ்ரீதரனும் மாத்யூவும் தொழிலாளர் இயக்கத்தில் ஈடுபடுகின்றனர். இதனால் ஸ்ரீதரன் மணம் முடிக்க இருந்த மாமன் மகள் ஒரு குடிகாரனுக்கு வாழ்க்கைப் படுகிறாள். குடிகாரனுக்கு வாழ்க்கைப்பட்டவள் வேசியாகும்நிலை ஏற்படுகிறது. பிரபல வக்கிலும் கம்யூனிஸ்ட் ஆதரவாளருமான வர்க்கி செரியானுக்கு ஆசை நாயகியாக இருக்கிறாள்.

ஸ்ரீதரன் தொழிலாளர் இயக்கத்தில் ஈடுபட்டு கைது செய்யப்படுகிறான்.

மாத்யூ தலைமறைவாக இருக்கிறான். இவர்களுடைய கல்லூரி நண்பர்களான உயர்நிலைப் பள்ளி ஆசிரியர் வேணு இவர்களுக்கு நண்பர் என்ற முறையில் உதவி செய்கிறார். இவர்களுடைய அரசியல் கருத்தை அவர் ஏற்கவில்லை.

சப்ஜெயிலில் அடைக்கப்பட்ட ஸ்ரீதரனுக்கு போலீஸ்காரரும் கதகளி நடிகராக இருந்தவருமான பாஸ்கரன் நாயர் பள்ளி ஆசிரியையான தன்னுடைய மகளிடமிருந்து புத்தகங்கள் வாங்கிச் சென்று ரகசியமாக ஸ்ரீதரனுக்கு கொடுக்கிறார். சில நாட்களில் ஸ்ரீதரனுக்கும் பள்ளி ஆசிரியை வஸந்தாவுக்குமிடையே புத்தகங்கள் மூலமாகவே காதல் உணர்வு வளருகிறது. ஆனால் ஸ்ரீதரன் சில நாட்களில் சிறையிலிருந்து தப்பியோடி விடுகிறான். இதனால் போலீஸ்காரர் பாஞ்சாலி பாஸ்கரன் நாயர் சஸ்பெண்ட் செய்யப்படுகிறார்.

தப்பியோடிய ஸ்ரீதரன் இரவு நேரத்தில் கட்சி ஆதரவாளரான வக்கீல் செரியான் வர்க்கி வீட்டிற்குச் செல்லுகிறான். அவர் அங்கு தங்க இடமளிக்க மறுக்கிறார். தேவையானால் பணம் தருவதாகக் கூறுகிறார். ஸ்ரீதரன் அதை மறுத்து விட்டு வேசியாக வாழ்க்கை நடத்தும் டூரிஸ்ட் ராஜம்மாவின் வீட்டிற்கு செல்லுகிறான். அங்கு அடைக்கலம் கிடைக்கிறது.

தப்பியோடிய ஸ்ரீதரனைப் பிடிக்கும் முயற்சியிலீடுபட்டிருந்த போலீஸ்காரர் பாஞ்சாலி தலைமறைவாக இருந்த மாத்யூவினால் கொலை செய்யப்படுகிறார். போலீஸ்காரரின் மனைவி அதிர்ச்சியினால் இறந்து விடுகிறாள். மகள் வாசந்தி அனாதையாக விடப்படுகிறாள்.

கொலை செய்த மாத்யூ அணிந்திருந்த சட்டை மட்டும் எப்படியோ போலீசாரிடம் சிக்குகிறது. அது உயர்நிலைப் பள்ளி ஆசிரியர் வேணுவின் சட்டையென்று சலவையாளர் அடையாளம் காட்டவே அவர் கைது செய்யப்பட்டு கொலைக் குற்றத்திற்காக தண்டனை அடைகிறார்.

தலைமறைவாக இருந்த ஸ்ரீதரனுக்கு உதவி செய்ததற்காக டூரிஸ்ட் ராஜம்மா போலீஸாரால் சித்திரவதை செய்யப்படுகிறாள். போலீசின் பயமுறுத்தலுக்குப் பணியாமல் உறுதியாக நிற்கிறாள். அனாதையாக விடப்பட்ட போலீஸ்காரரின் மகள் வாசந்திக்கு ஆறுதல் கூறி புகலிடம் அளிக்கிறாள். அவளும் வேசி வாழ்க்கையை விட்டு விடுகிறாள்.

இதற்கிடையில் விவசாய தொழிலாளர் போராட்டத்தில் ஈடுபட்டு தலைமறைவாக இருந்த ஸ்ரீதரன் போலீசிடம் பிடிபடுகிறான்.

இறுதியில் மந்திரிசபை ராஜினாமா செய்ததாகவும், கவர்னர் ஆட்சி ஏற்பட்டதாகவும் ஆகவே அரசியல் கைதிகள் அனைவருக்கும் விடுதலையும் தலைமறைவாக இருந்தவர்கள் வாரண்டுகள் ரத்து செய்யப்பட்டதாகவும் அறிவிக்கப்படுகிறது அனைவரும் விடுதலையடைகிறார்கள் வரவேற்பு நடைபெறுகிறது. வரவேற்பு கூட்டத்திற்கு, வக்கீல் செரியான் வர்க்கி தலைமை வகிக்கிறார். புரட்சிகரமாக பேசுகிறார்.

உடனே பொதுத்தேர்தல் நடைபெறப் போகிறது. கட்சி அதிகாரத்திற்கு வரும் வாய்ப்பு உள்ளதாக அனைவரும் கருதுகின்றனர். வேட்பாளர் தேர்வு நடைபெறுகிறது. ஸ்ரீதரனை வேட்பாளராக கட்சி முடிவு செய்கிறது.

ஆனால் பள்ளி ஆசிரியரும், கட்சி எழுத்தாளரும், கவிஞருமான நிளாம்பரன், ஸ்ரீதரன் வேசியாக வாழும் டூரிஸ்ட் ராஜம்மா வீட்டிற்கு அடிக்கடி போய் வருவதால் பொது மக்கள் அவரைப் பற்றி கேவலமாக பேசுவதாகவும், ஆகவே அவரை வேட்பாளராக நிறுத்தக் கூடாதுஎன்று கட்சி ஆதரவாளர்களிடம் கையெழுத்து வாங்கி மாநில கமிட்டிக்கு மகஜர் அனுப்புகிறார்.

மாநிலக் கமிட்டி மாவட்டக் குழுக் கூட்டத்தை மீண்டும் கூட்டுகிறது ஸ்ரீதரனிடம் விளக்கம் கேட்கப்படுகிறது ஸ்ரீதரன் டூரிஸ்ட் ராஜம்மா தன்னுடைய மாமன் மகள் என்பதையும், யாரும் உதவி செய்ய மறுத்த நெருக்கடியான காலத்தில் உதவி செய்தவள் என்றும் அதுமட்டுமல்லதான் திருமணம் செய்ய விருக்கும் வாசந்தியும் அங்கு தான் இருக்கிறாள். ஆகவே நான் அந்த வீட்டிற்கு போவதை நிறுத்த முடியாது என்றும் கூறுகிறான்.

ஸ்ரீதரனின் விளக்கத்தை ஏற்க மாவட்டக் குழு மறுக்கிறது. ஸ்ரீதரன் வாசந்தியை கல்யாணம் செய்யக்கூடாது என்றும், ராஜம்மா வீட்டிற்கு போகக் கூடாது என்றும் கட்சி முடிவு செய்கிறது. இந்த முடிவை ஸ்ரீதரன் ஏற்காததால் அவரை வேட்பாளராக நிறுத்தக் கூடாது என்றும் முடிவு செய்கிறார்கள். உடனே ஸ்ரீதரன் கூட்டத்திலிருந்து வெளியேற வேண்டுமென்று மாநில கமிட்டி உறுப்பினர் கட்டளையிடுகிறார்.

புதிய வேட்பாளர் தேர்வு நடைபெறுகிறது. பண வசதியுள்ளதாலும், குடும்ப செல்வாக்கு உள்ளதாலும் தொகுதியில் கிருஸ்தவர்கள் அதிகமாக உள்ளதாலும் வக்கீல் வர்க்கி செரியானை வேட்பாளராக நிறுத்துவது என்று முடிவு செய்கிறார்கள்.

ஸ்ரீதரனை கட்சியிலிருந்து நீக்கி விட்டதாக பத்திரிகையில் செய்தி வருகிறது. மனமுடைந்த ஸ்ரீதரன் டூரிஸ்ட் ராஜம்மா வீட்டிற்கு செல்லுகிறான் அங்கு இவரைபோன்ற அரசியல் தலைவர்களுக்கு இடமில்லையென்றும் வாசந்தியை வேறொருவருக்கு மணம் முடித்து விட்டதாகவும் ஆகவே அங்கு வரக்கூடாது என்றும் ராஜம்மா கூறுகிறாள்.

மனமுடைந்த ஸ்ரீதரன் கட்சி அலுவலகத்திற்கு வருகிறான். அங்கு ஒரு மூலையில் படுக்க இடம் கேட்கிறான். பல உறுப்பினர்கள் ஆட்சேபித்த போதிலும் அவனுடைய கல்லூரி நண்பனும் மாவட்டச் செயலாளருமான மாத்யூ அதற்கு சம்மதிக்கிறான். நோயாளியான ஸ்ரீதரன் அங்கு தங்குகிறான்.

ஸ்ரீதரனின் அரசியல் நடவடிக்கைகளால் அவனுடைய குடும்பம் சீர்குலைந்துவிட்டது. இருப்பினும் மகனுடைய நிலையை அறிந்த பெற்றோர்கள் அவனை அழைத்துச் செல்ல வருகின்றனர். தான் வீட்டிற்கு வரமுடியாது என்று பிடிவாதமாக மறுத்து விடுகிறான்.

நிலைமையை அறிந்த டூரிஸ்ட் ராஜம்மா அவனை சந்தித்து ஆறுதல் கூறி அழைத்துச் செல்லுகிறாள். ராஜம்மாவின் வீட்டில் அவன் வாசந்தியை சந்திக்கிறான். அவள் யாரையும் மணம் செய்யவில்லை என்பதையும் தனக்காகவே காத்திருக்கிறாள் என்பதையும் அறிகிறான்.

கட்சி முடிவை ஸ்ரீதரனை ஏற்கச் செய்ய மாவட்டச் செயலாளர் மாத்யூ ராஜம்மாவின் உதவியை நாடியதனாலேயே, வாசந்திக்கு மணம் முடிந்து விட்டது என்றும், இனி அவன் வீட்டிற்கு வரவேண்டாமென்றும் ராஜம்மா ஸ்ரீதரனிடம் கூறினாள் என்பதையும் இப்போது தெரிந்துகொண்டான். வாசந்தி ஸ்ரீதரனுடன் சேர்ந்து விடுகிறாள்.

இதற்கிடையில் தேர்தலில் வெற்றியடைந்த கட்சி மந்திரி சபை அமைக்கிறது. வக்கீல் வர்க்கி செரியான் மந்திரியாகி விட்டார். அவருக்குப் பெரும் வரவேற்பு, ''இங்குலாப் சிந்தாபாத்'' என்று முழங்கிக் கொண்டு ஒரு பெரும் கூட்டம் வருகிறது.

நோயாளியான ஸ்ரீதரனும் இங்குலாப் ஜிந்தாபாத் என்று உரத்த குரலில் முழக்கமிடுகிறான். முழங்கிக்கொண்டே அவன் உயிர் விடுவதாக சித்தரிக்கப்பட்டுள்ளது. இதுதான் இங்குலாப் சிந்தாபாத்தின் கதை.

இந்த நாட்டில் குறிப்பாக கேரளத்தில் கம்யூனிஸ்ட் இயக்கத்தால் தொழிலாளர்களும், விவசாயிகளும், படித்த மத்திய தர வர்க்க பகுதி மக்களும் அடைந்த முன்னேற்றத்தை முழுமையாக மறைக்கிறார்கள். ஜாதி, மத, நிலப் பிரபுத்துவ சுரண்டலுக்கு அடிமையாக்கப் பட்டிருந்த உழைப்பாளி மக்கள் தலை நிமிர்ந்து நின்று வீர நடை போட்டு தங்களுடைய உரிமைப் போரில் முன்னேறுவதை, ஒரு புதிய சமுதாயத்தை உருவாக்கும் திசையில் புரட்சிகரமான இயக்கம் முன்னேறுவதை மறைத்து, திரித்து, அவதூறு செய்கிறார்கள். தனி நபர்கள் பாதிக்கப்படுவது, அவர்களது வாழ்க்கை ஆகியவைகளுக்கு அரசியலில் இடமில்லை என்று ஒரு கம்யூனிஸ்ட் கூறுவதாகவும் ஒருவரை நேசிக்க முடியாதவர்கள் லட்சம் பேரை எப்படி நேசிக்க முடியும் என்று பள்ளி ஆசிரியர் வேணு கேட்பதாகவும் சித்தரித்து அது தான் சரி யென்று கம்யூனிஸ்ட் ஸ்ரீதரன் இறுதியில் உணருவதாகவும் காட்டப்படுகிறது. சமுதாயத்தில் சீரழிக்கப்பட்ட ராஜம்மா திருந்திய பிறகும் அவளை ஏற்க கட்சி மறுப்பதாக, காதலித்த பெண்ணை கல்யாணம் செய்யக்கூடாது என்று கட்சி மறுப்பதாக சித்தரிக்கப் பட்டதனால் இந்தப் போராட்டம் தோல்வியடையு மென்று தொழிலாளர்கள் பேசுகின்றனர். தொழிலாளர் இயக்கத்தின் பக்கம் உறுதியாக நின்று முற்போக்கு இலக்கியங்களை படைக்கும் எண்ணற்ற சிறந்த எழுத்தாளர்கள் இருப்பதை மறைத்து தொழிலாளி வர்க்க எழுத்தாளர்களை கோமாளியாக சித்தரிக்கப் பட்டுள்ளது. நல்ல பண்பாடுகளை எல்லாம் ''பூர்ஷ்வா கச்சர்'' என்று கம்யூனிஸ்ட்கள் கூறுவதாக சித்தரிக்கப்படுகிறது. கட்சிக்காக உழைத்து குடும்பம் சீர்குலைந்து உடல் நலமும் பாதிக்கப்பட்ட ஊழியரை அவருக்கு காரணம் காட்டி, விளக்கம் கேட்காமலேயே வெளியேற்றுவதாகசித்தரிக்கப்பட்டுள்ளது. முக்கிய கட்சி ஊழியர்கள், மனித தன்மையற்ற. பண்பாடற்றவர்கள் என்று சித்தரிக்கப்பட்டுள்ளது. இறுதியாக பணவசதியுள்ளவர்கள் பதவிகள் பெறுவதற்குத்தான் கட்சி பயன்பட்டது என்று சித்தரிக்கப்பட்டுள்ளது.

இவ்வளவும் கம்யூனிஸ்ட் இயக்கத்தில் பொதுவாக நடப்பதாக மட்டும் கூறவில்லை. குறிப்பாக மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியை சுட்டிக் காட்டுகிறார்கள். படத்தில் காட்டுகிற கட்சி அலுவலகத்தில் ஸ்டாலின் படம் காட்டப்படுகிறது. வலது கட்சி அலுவலகத்தில் ஸ்டாலின் படம் இருக்காது. அது மட்டுமல்ல. ஏ. கே. கோபாலன், படமும், இ. எம் எஸ். படமும் காட்டப்படுகிறது. அதே நேரத்தில் வலது சாரி கட்சி தலைவர்களுடையபடம் இல்லை.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியை அவதூறு செய்யும் நோக்கத்துடன் எடுக்கப்பட்ட படம்.

வலது சாரிகள் உதவியுடன் எடுக்கப்பட்ட படம். வலது சாரிகளின் பத்திரிகையான ஜனயுகத்தின் நிர்வாகிகளும், தொழிலாளர்களும் படமெடுக்க உதவி செய்ததற்காக அவர்களுக்கு துவக்கத்தில் நன்றி தெரிவிக்கப்பட்டுள்ளது.

ஆரம்பத்தில் கம்யூனிஸ்ட் இயக்கத்தில் இருந்து வளர்ந்து அடக்கு முறைகளும், கஷ்டங்களும் ஏற்பட்ட போது ஓடி ஒளிந்துஇன்றுசென்னை ஓட்டல்களில் மதுத்தொட்டியில் மூழ்கியிருப்பவர்கள் தான் இந்த படத்தின் சிருஷ்டிகர்த்தாக்கள் எஸ் எல். புரம், சதானந்தனும், வயலார் ராமவர்மாவும் இவ்வளவு கேவலமான நிலைக்கு சென்றிருக்க வேண்டியதில்லை. சத்யன் மது, ஷீலா, சங்கராடி, ஜயபாரதி, அடூர் பாசி போன்ற சிறந்த நடிகர்களைப்பயன்படுத்தி இத்தகைய கேவலமான பிரச்சாரம் செய்யப்படுகிறது.

டைரக்டர் சேதுமாதவன் இத்தகைய ஒரு படத்தை டைரக்ட் செய்தது அவர் பெயருக்கே ஒரு இழுக்காகும். மொத்தத்தில் இது ஒரு தோல்வி படம். சென்னையில் ஒரு வாரம் கொட்டகை காலியாகவே இருந்ததால் 'டக்' அடித்து விட்டது.

இத்தகைய பிற்போக்கு சரக்கு விலை போகாது என்பதை இனியாவது உணரட்டும்.

—பி. ஆர். பி. சென்னை.



வி. கே ராமசாமியின் கேலிச்சிரிப்பால் கோபமடைந்திருக்கும் சுகுமாரியை ஜெயலலிதா மனம் தேற்றுகிறாரா?
—படம்: பட்டிக்காடா? பட்டணமா?

# கைத்தறியைவிட விசைத் தறிக்கு வரிச்சலுகை ஏன்?

## அ. இ. நெசவாளர் சங்க தலைவர் கேள்வி

சேலம், நவ. 19— கைத்தறி தொழிலுக்கு இல்லாத வரிச் சலுகை விசைத்தறி தொழிலுக்கு அளிக்கப்பட்டிருப்பதாகவும் இந்த விபரீத நிலைமையை மாற்றாவிட்டால் கைத்தறி தொழிலில் ஈடுபட்டுள்ள 2 கோடி பேரின் வாழ்வு அதோகதியாகிவிடும் என்றும் அகில இந்திய கைத்தறி கூட்டுறவு சங்க தலைவர் திரு. எம் சோமப்பா எச்சரித்தார்.

சேலம் மாவட்ட கூட்டுறவு நெசவாளர் கூட்டத்தில் அவர் பேசினார்.

விசைத்தறியைப் புகுத்துவதால் லட்சக்கணக்கான கைத்தறி நெசவாளர் வேலை இழப்பர் என்றும் அவர் கூறினார்.

பஸ் கட்டண உயர்வு

# மூணாறு நகரில் மறியல் போராட்டம்

மூணாறு, நவ. 19— கேரளத்தில் ஆட்சி பீடத்தில் இருக்கும் வலது கம்யூனிஸ்டு—இண்டிகேட் காங்கிரஸ் அரசாங்கம் பஸ் கட்டணத்தை உயர்த்தியுள்ளது. அதைக் கண்டித்து நவ. 10-ல் மூணாறு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மூணாறு கிளை சார்பில் மறியல் போராட்டம் நடந்தது. மறியலில் தோழர் வி. ஈ. அப்துல்காதர் தலைமையில் 19 பேர் கலந்து கொண்டு கைதானார்கள்.

அன்று பகல் 2 மணிக்கு ஜாமீனில் விடுதலையடைந்தவுடன் ஊர்வலம் நடந்தது. பஸ் கட்டண உயர்வைக் கண்டித்தும். மத்திய அரசின் வரி உயர்வைக் கண்டித்தும், தனியார் பஸ் முதலாளிகள் சரியான நேரத்தில் பஸ் விடாததைக் கண்டித்தும் முழக்கம் எழுப்பப்பட்டது பின்பு நடந்த பொதுக்கூட்டத்தில் தோழர்கள் ஜி. வரதன் எம். எல். ஏ., ஜோசப் சாவேலி, எஸ் பால்ராஜ், எஸ். சூசைமாணிக்கம் ஆகியோர் பேசினர்.

# ★ கண்ணோட்டம் ★

## அமெரிக்க முதலாளிகளுக்கு தமிழ் நாட்டில் ஒரு "சேல்ஸ்மேன்"

இடத்திற்குத் தகுந்தாற்போல் பேசி ஏமாற்றிப் பிழைப்பவனை எத்தன், புரட்டன், மோசடிக்காரன் என்பார்கள்.

ஆனால், அவன் என்ன நினைத்துக்கொள்வான் தெரியுமோ? 'என்னைப்போல கெட்டிக்காரர் இந்த உலகத்தில் உண்டோ? எல்லாவற்றையும் நாசுக்காக, சாதுரியமாகப் பேசி காரியத்தை முடித்துவிட்டேன். என்னுடைய ஏமாற்று வேலையை எவரும் கண்டுபிடிக்க முடியாது. கண்டுபிடித்தாலும் என்னைப் பிடிக்க முடியாது' என்று எண்ணிக்கொள்வான்.

மற்றவர்களை ஏமாற்றுவதுபோலவே அவன் தன்னையும் ஏமாற்றிக்கொள்கிறான்!

எப்பேர்ப்பட்ட எத்தனையும் மக்கள் இனங்கண்டு கொள்ளுவார்கள் அதனால்தான், "பலநாள் திருடன் ஒருநாள் பிடிபடுவான்" "கெட்டிக்காரன் புளுகு எட்டு நாளைக்குத்தான்" என்ற பழமொழிகள் நாட்டில் நிலவுகின்றன.

∴ ∴ ∴

சாதுரியமாக பல இடதுசாரிக் கோஷங்களை முழக்கி தி.மு.க. தலைவர்கள் பதவிக்கு வந்தார்கள்.

காங்கிரசின் பிற்போக்குக் கொள்கைகளை எல்லாம் எதிர்ப்பதாகப் பறைசாற்றினார்கள். டாட்டா-பிர்லா ஏஜெண்டுதான் காங்கிரஸ் என்றார்கள். ராஜாஜியின் கூஜா காங்கிரஸ் என்று போஸ்டர் போட்டார்கள்!

காகிதப் பூ மணக்காது; காங்கிரஸ் சோஷலிசம் இனிக்காது என்று அடுக்குமொழி பேசினார்கள்.

தமிழகத்திலே கம்யூனிஸ்ட் கட்சி பிரதான எதிர்க்கட்சியாக இருந்தபோது அதன்மாநாடுகளில் நிறைவேற்றிய தீர்மானங்கள் பலவற்றை—தங்கள் மாநாடுகளில் தங்களுடைய தீர்மானங்களாகத் தீட்டி—பார்! பார்! நாங்களும் பொதுவுடைமையாளர்கள்தான்—இதில் சந்தேகமிருந்தால் மாஸ்கோவிற்குப் போவேன்! மாலங்கோவைப் பார்ப்பேன்! தென்னகத்திலே பொதுஉடைமைக்கட்சி திரு முருகாருதான்என்று கூறுவேன், நிலை நாட்டுவேன்! என்று சண்டப்பிரசண்டம் செய்தார்கள்.

இவையெல்லாம் பார்த்த மக்கள் தி. மு. க. வும் "ஒருவகையான தீவிரக்கட்சியாகத்தான் இருக்கும்போல தெரியுது" என்று நம்பினர்; ஆதரவு தந்தனர். பதவிக்கு வந்த தி. மு. க. தலைவர்களின் வழி முறைகள் இவை—அல்ல வரலாற்று நிகழ்ச்சிகள் இவை.

∴ ∴ ∴

ஆனால்......ஆனால்......! நடந்ததென்ன! கெட்டிக்காரன் புளுகு எட்டு நாளைக்குத்தான் என்பதுபோல்......

பதவிக்கு வந்த ஒன்றிரண்டு ஆண்டுகளுக்குள்ளேயே—

தி. மு. க. தலைவர்களின் திசைவழி மக்கள் மன்றத்திலே தொழிலாளர்கள்— விவசாயிகள்— மாணவர்கள் மத்தியிலே ஒன்றன்பின் ஒன்றாக அம்பலமாகியது.

∴ ∴ ∴

வெகுதூரம் போவானேன். நேற்று நடந்ததை எடுத்துக்கொள்ளுங்கள்!

பண்டங்கள் உபயோகிப்போர் சங்கத்தில் மந்திரி மாதவன் நேற்றுப் பேசினார்.

விலைவாசி உயர்வுக்கு மத்திய அரசின் கொள்கைகள் தான் காரணமென்றார்.

அருமையான பேச்சு! இடத்திற்குத் தகுந்த பேச்சு!

விலைவாசி உயர்வுக்கு மத்திய அரசுதான் பொறுப்பாளி— மாநில அரசு அல்ல என்று பேசி—

மத்திய அரசுடன் தி. மு. க. அரசும் சேர்ந்து பொறுப்பாளியாக இருக்கிற பகிரங்க உண்மையை மறைக்க முயன்றார் மாதவன்.

மத்திய அரசின் மீது முதல்நாள் குற்றஞ் சாட்டிய மாதவன் மறுநாள் அமெரிக்க உதவியைப் பெறுவதற்கு வழி என்ன என்பதை ஆராய்ந்த தென்னிந்திய முதலாளிகளின் கூட்டமொன்றில் பேசியபோது என்ன கூறினார் தெரியுமா? அமெரிக்க முதலாளிகளுடன் கூட்டு ஒப்பந்தங்கள் செய்துகொண்டு இந்திய மக்களைக் கொள்ளையடிக்கும் இந்தியப் பெரு முதலாளிகளின் இந்திரா ஆட்சியின் கொள்கைகளுக்கு கட்டியம் கூறினார்! சபாஷ் போட்டார்!

அத்துடன் நின்றாரா? இல்லை. அதற்கு மேலும் தாண்டினார்! தாய் ஓரடி பாய்ந்தால் குட்டி எட்டடி பாய்வதுபோல்! இந்திரா காந்தியைவிட— இராசகோபாலாச்சாரியைவிட — வாஜ்பாயியைவிட— நான்தான்- தி மு. க. அரசின் மந்திரியாகியநான்தான்— சிறந்த அமெரிக்க முதலாளித்துவ விசுவாசி, பக்தன் என்பதற்கு அத்தாட்சிகள் தந்து பேசினார்.

என்ன அத்தாட்சி?

"அமெரிக்க நாட்டிற்கு நான் சென்றிருந்தபோது தமிழ் நாட்டின் சார்பாக நான் பேசிய கருத்துக்களுக்கு அங்கு நல்ல வரவேற்பு இருந்தது............" தினமணி 19—11—71

இதுதான் தமிழ்நாட்டு முதலாளிகள் மன்றத்தில் மந்திரி மாதவன் அறிமுகப்படுத்திக்கொண்ட பணி!

இடத்திற்குத் தகுந்த பேச்சு! தமிழ்நாட்டு முதலாளிகளிடம் நற்சான்றிதழ் பெற அமெரிக்காவில் தனக்குக் கிடைத்த நற்சான்றிதழை உதாரணமாகக் காட்டுகிறார் மாதவன்.

அத்துடன் நிற்கவில்லை அமெரிக்க முதலாளிகளுக்கு நம்பிக்கையான நல்ல வக்கீல்தான் தான் என்பதைக் காட்டிக்கொள்ள தொடர்ந்து பேசினார்.........

"இந்தியப் பொருளாதாரத்தில் சமீபத்தில் ஏற்பட்டுள்ள போக்குப்பற்றி, சில அன்னிய முதலீட்டுக்காரர்கள் அஞ்சுகிறார்கள் உரிமைத் தொகை விகித பிரச்னை, வரிப் பணம், லாபத்தைச் சொந்த நாடுகளுக்கு அனுப்புவதில் உள்ள சிக்கலான நடைமுறைகள், உடன்பாடுகள் நிறைவேறுவதிலுள்ள தாமதங்கள் அவர்களுக்கு அச்சத்தை ஏற்படுத்துகின்றன."

—தினமணி 19—11—71.

இப்பப் புரிகிறதா? தி. மு. க. மந்திரி மாதவன் அமெரிக்காவில் பெற்று வந்த சர்டிபிகேட்டின் உள் அர்த்தம் என்ன என்பது புரியுதா?

இந்திய அரசாங்கம் இன்று அமெரிக்க முதலாளிகளுக்கும் ஏனைய அன்னிய நாடுகளின் முதலாளிகளுக்கும் செய்து கொடுத்துள்ள வசதிகள் போதா, என்பது மாதவனின் வாதம்.

இந்நாட்டில் அந்த அன்னியர்கள்இப்போது போட்டிருக்கிறார்களே மூலதனம் ரூ, 1298 கோடி!

இதற்கு லாபமாக 12 கோடி; டிவிடெண்ட் என்ற பெயரில் ரூ 31 கோடியே 40 லட்சம்! இது 1970-ம் ஆண்டுக் கணக்கு என நிதியமைச்சர் சாவன் தந்த தகவல்!

இது முழு விவரமல்ல; அமெரிக்கக் கடன்களுக்கு இந்திய அரசு தரும் வட்டிக் கணக்கு இதில் சேரவில்லை. அமெரிக்க நிபுணர்களுக்கு அள்ளிக் கொடுக்கும் சம்பளங்களும் இதில் சேரவில்லை.

அமெரிக்க உதவி வேண்டுமானால், அமெரிக்கக் கப்பல்களில்தான் சாக்குகளை ஏற்றுமதி செய்யவேண்டும்; இறக்குமதி செய்யவேண்டும் என்று நிர்ப்பந்திக்கும் நிபந்தனையின்படி, இந்தியா கட்டிவரும் கப்பல் கட்டணக் கணக்கு இதில் சேரவில்லை.

இப்படியாக ஆண்டுதோறும் ரூ 200 கோடிக்கும் அதிகமாக அன்னியர்கள் நம் செல்வத்தைக் கொள்ளை கொண்டு போவதால் நாடு மேலும் மேலும் வறுமைக்கும்— வேலையில்லாக் கொடுமைக்கும்— விலைவாசி உயர்வுக்கும் பலியாகி வருகிறதே!

இதுபற்றிக் கவலையில்லை. தி. மு. க. மந்திரிக்கு. அவர் கூறுகிறார் வாதாடுகிறார் அமெரிக்க வக்காலத்துடன்:

அமெரிக்கர்களுக்கும் ஏனைய அன்னியர்களுக்கும் இன்று இந்திரா காந்தி செய்து கொடுத்துள்ள ஏற்பாடுகள் போதாது—

இதனால் அமெரிக்காவிலே அதிருப்தி நிலவுகிறது... அச்சம் வளருகிறது.

ஆகவே, மத்திய அரசே! எமது அபிமானிகளான அமெரிக்க முதலாளிகளுக்கு மேலும் நல்ல முறையில் அர்ச்சனை நடத்தணும்! இல்லையென்றால் கோபம் வந்துவிடும்... பயங்கர விளைவுகள் ஏற்படும்!

எனவே திறந்திடுவீர் கதவை— தங்கு தடையின்றி— எத்தகைய கட்டுப்பாடுகளின்றி— அவர்கள்கொள்ளையடிக்க வழிவகுத்திடுவீர்! இன்றைய சட்டங்களையும், வரிவிதிப்பு முறைகளையும் அமெரிக்க முதலாளிகளுக்காகத் தளர்த்திடுவீர்! விதி விலக்களித்திடுவீர்!

அப்பொழுதுதான் வந்து குவியும் அமெரிக்க மூலதனம்!

இதுவே தி. மு. க. மந்திரி மாதவன் இந்திய அரசிடம் கெஞ்சுகின்ற கெஞ்சல!

அன்று பொதுவுடமைப் பூங்கா பற்றிப்பேசியவர்கள்; இன்று, அமெரிக்க முதலாளிகளின் தமிழ் நாட்டுச் சேல்ஸ்மென்னாக 'வியாபாரியாக' மாறிவிட்டது. படு கேவலமான வீழ்ச்சியல்லவா? வீழ்ச்சிதான்! தாழ்ச்சிதான்! அசிங்கந்தான், கேவலந்தான்!

ஆனால் மந்திரி மாதவன் அதற்காக வெட்கப்படுபவர் அல்லவே!

—கே. முத்தையா

# சிம்சன் தொழிலாளர் பேரவையில் சந்திக்கத்தயாரா?

# தி.மு.க. அமைச்சருக்கு ஒரு கேள்வி?

### வி. பி. சிந்தன் அறிக்கை

சென்னை, நவ. 20— சிம்சன் கம்பெனியில் காட்டூர் கோபால் செய்து கொண்ட உடன்பாட்டைத் தொழிலாளர்கள் ஏற்றுக் கொள்கிறார்கள் என்று அமைச்சர் என். வி. நடராஜன் கூறுகிறார். அப்படியானால் சிம்சன் தொழிலாளர்களின் பேரவையைக் கூட்டத் தயாரா என்று தோழர் வி. பி. சிந்தன் கேட்டார்.

சிம்சன் கம்பெனித் தொழிலாளர்களில் பெரும் பாலோர் தி மு. கழகத்தைச் சேர்ந்தவர்கள்தான். எனவே அமைச்சர் பொதுக் கூட்டத்தில் பேசுவதை விட தொழிலாளர் பேரவையக் கூட்டி அதில் காட்டூர் கோபால் செய்து கொண்ட ஒப்பந்தம் சரிதான் என்று கூறத் தயாரா?

தமிழ்நாடு தொழிற் சங்க மைய (சி. ஐ. டி. யூ) துணைச் செயலாளர் வி பி சிந்தன் தன் அறிக்கையில் குறிப்பிட்டுஇருப்பதாவது: பொதுக்கூட்டத்தில் பேசுகிற அமைச்சர் சிம்சன் தொழிலாளர் பேரவைக் கூட்டத்தில் பேசத் தயாரா? அந்தப் பேரவை எடுக்கும் முடிவுகளுக்குக் கட்டுப்படத் தயாரா?

சிம்சன் தொழிலாளர்கள் உடன்பாட்டை எதிர்த்துத் தானே கட்டுப்பாடாக வேலை நிறுத்தம் செய்தனர். எம். ஆர். வி. எஸ். தொழிலாளர்கள் இன்றும் உள்ளிருப்பு வேலை நிறுத்தம் செய்வது உடன்பாட்டை எதிர்க்கத் தானே? மவுண்ட் ரோடு சிம்சன் கம்பெனியில் முழுமையான வேலை நிறுத்தம் நடந்ததும், காட்டூர் கோபால் உடன்பாட்டை நிராகரித்துத் தானே? யாரை ஏமாற்றுவதற்காக அமைச்சர் இவ்வளவு பெரிய தவறான கருத்தைக் கூறுகிறார்.

காட்டூர் கோபால் உடன்பாட்டை பெருவாரியான தொழிலாளர்கள் விரும்பவில்லை என்பதை மீண்டும் வேலை நிறுத்தம் செய்து தான் நிருபிக்க வேண்டும் என்று அமைச்சர் விரும்பினால் அதற்குத் தொழிலாளர்கள் தயார் ஏன்! தொழிலாளர் பேரவையைக் கூட்டி அமைச்சர்முடிவு கண்டு விடலாமே?

காட்டூர் கோபால் உடன்பாட்டைத் தொழிலாளர்கள் எதிர்க்கவில்லை: வெளியார் தான் எதிர்க்கிறார்கள் என்று அமைச்சர் கூறுவது ரவுடிகளை ஊக்குவிப்பது போன்று இருக்கிறது.

தொழில் அமைதியை ஏற்படுத்தவேண்டும்என்றநோக்குடன் அமைச்சர் என் வி. நடராசனைச் சந்தித்த பின்னர்தொழிலாளர்களை வேலைக்குத் திரும்பும்படி தொழிற்சங்கத் தலைவர்கள் கேட்டுக் கொண்டனர். அதன்படி தொழிலாளர்களும் வேலைக்குத் திரும்பினர். வேலைக்குத் திரும்பும் தொழிலாளர்களுக்கு பாதுகாப்பு அளிக்கப்படும் என்று அமைச்சர் வாக்குறுதி அளித்தார் ஆனால் நடைபெறுவது என்ன?

செம்பியம் சிம்சன் கம்பெனியில் ராமசாமி என்ற தொழிலாளியைத் தாக்க முனைந்தனர் அவர் டைரக்டரின் அறைக்குள் ஓடினார். அவருக்குப் பாதுகாப்புக் கொடுக்கப்படவில்லை.

துணைக்கு ஒருவரை அனுப்பி அவரை வெளியே போகச் செல்லி இருக்கின்றனர். தொழிலாளர்களுக்குப் பாதுகாப்பு அளிப்பது நிர்வாகத்தின் கடமை அல்லவா?

செம்பியத்தில் வேலைமுடித்து வீட்டுக்குத் திரும்பிய சுந்தரம் என்ற தொழிலாளி தாக்கப்பட்டார். போலீசாரிடம் புகார் கூறப்பட்டது. ஆனால் நடவடிக்கை எடுக்கும்படி தங்களுக்கு உத்தரவு இல்லை. என்று போலீசார் கூறியிருக்கின்றனர் செம்பியம் கான்டீனில் ஒரு தொழிலாளி தாக்கப்பட்டு இருக்கிறார். பாரபட்சமற்ற நடவடிக்கை எடுப்போம் என்று போலீஸ் கமிஷனர் செஷாய் கொடுத்த வாக்குறுதி என்ன ஆனது? தாக்குகின்றவர்கள் மீது நடவடிக்கை இல்லை. மந்திரி வாக்குறுதி என்னஆயிற்று?

இத்தகைய தாக்குதல்களைக் கண்டித்துத்தான் செங்கல்பட்டு மாவட்டத் தொழிலாளர் இணைப்புக்குழு, சி ஐ டி யூ சங்கங்களைச் சேர்ந்த தொழிலாளர்கள் ஸ்ட்ரைக் செய்தனர். அத்தகைய நிலைமை மீண்டும் ஏற்படாதபடி அமைச்சர் நடவடிக்கை எடுப்பார் என்று எதிர்பார்க்கிறேன்.

இவ்வாறு தோழர் வி பி. சிந்தன் தன் அறிக்கையில் குறிப்பிட்டு இருக்கிறார்.

### அறிவிப்பு

நமது அச்சகத்திற்கு ஞாயிற்றுக்கிழமை (21—11—71) விடுமுறையாகையால் திங்கள்கிழமை (22—11—71) பத்திரிக்கை வெளிவராது

செவ்வாய்கிழமை (23 — 11 — 71) முதல் தொடர்ந்து வெளிவரும் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

நிர்வாகி,
தீக்கதிர்

## தி.மு.க.உறுப்பினரை தி. மு. க. வினரே தாக்கினர்!

கோவை, நவ. 20 — கோவை நேரு நகரைச் சேர்ந்த பாலன் என்ற தி. மு. க. தோழரை, தி மு க.வினரே தாக்கினர். ஆத்திரமடைந்த தி மு. க. வினர் நூறு பேர் பி. டி. ரணதிவே மன்றத்தில் சேருகின்றனர்.

தோழர் பாலன் நேரு நகரிலுள்ள நாவலர் நெடுஞ்செழியன் மன்றத்தின் தீவிர உறுப்பினர். அந்தப் பகுதியில் பிரபலமான தி மு க. தொண்டர்.

இவரை நாவலர் மன்றச் செயலாளரும், வேறு சில தி. மு. க. வினரும் தாக்கி, அவருடைய வீட்டிற்கு முன் இருந்த கொடிக்கம்பத்தை பிடுங்கி எறிந்துவிட்டனர்.

ஏனெனில், பாலன், அந்தப் பகுதியில் வாழும் ராஜம்மாள் என்பவரின் மகன், ருக்மணிமன்றத்தில் சீட்டாட்டம் நடத்தியதைக் கண்டித்தாராம்.

மேலும் நாவலர் நெடுஞ்செழியன்மன்றஉறுப்பினர்கள், மன்றத்தில் சாராயம் குடித்துவிட்டு கலாட்டா செய்ததை கண்டித்தும் கேளாததால், பொது மக்களிடம் விளக்கமாக எடுத்துச் சொன்னார்.

நியாயத்தை எடுத்துச் சொன்ன, பாலனை தாக்கியதால் அப்பகுதி மக்கள் ஆத்திரம் அடைந்துள்ளனர்.

பாலனும், பொதுமக்களும் ஆக நூறு பேர் தியாகி நேரு நகரிலுள்ள பி.டி. ரணதிவே மன்றத்தில் சேருவதாக கையெழுத்துப்போட்டு, எழுதிக்கொடுத்திருக்கிறார்கள்.

(ந. நி.)

# மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி குமரி மாவட்ட மாநாடு

குழித்துறை, நவ. 20— 12-11-71பிற்பகல், தோழர் ஜி எஸ். மணிஅவர்கள் கொடி ஏற்றிவைக்க மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி குமரி மாவட்ட மாநாடு ஆரம்பமானது

தோழர்கள் பி. பெருமாள், பி. நடராஜன், ஏ. நடராஜன் கொண்ட தலைமை குழு தேர்ந்தெடுக்கப்பட்டது.

தியாகிகளுக்கு வணக்கம் செலுத்தியபின், குழித்துறை டி. கே. கி. தியேட்டரில் (வெண்மணி தியாகிகள் அரங்கில்) பிரதிநிதிகள் மாநாடு துவங்கியது. மத்தியக்குழு தீர்மானத்தைதோழர் ஆர். உமாநாத் விளக்கி அறிக்கை செய்தார். அதன் பிறகு வேலை அறிக்கை சமர்ப்பிக்கப்பட்டு விவாதம் நடைபெற்றது.

**பிரதிநிதிகள், மாவட்டக்குழு தேர்வு**

அடுத்து மாவட்டக்குழு தேர்தல்நடைபெற்றது. எம். எம். அலி, மாவட்டக்குழு செயலாளராகவும் ஜே. ஹேமச்சந்திரன், டி. திவாகரன், பி. பெருமாள், டி. மணி ஆகியோர் செயற்குழு உறுப்பினராகவும் ஜி எஸ்.மணி, என். அச்சுதன், கி.கனகராஜ்,ஏ.நடராஜன், வி. முத்துசாமி, ஏ. ஏ. கிருஷ்ணன் குட்டி, ஈ. கோவிந்தன் தம்பி உறுப்பினராகவும் கொண்ட மாவட்டக்குழு தேர்ந்தெடுக்கப்பட்டது. 15 பேர் மாநில மாநாட்டிற்கு பிரதிநிதிகளாக தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

**பொதுக்கூட்டம்**

நவம்பர் 12-ம் நாள் குழித்துறை வேலுதம்பி திடலில் நடைபெற்ற பொதுக்கூட்டத்திற்கு தோழர் பி. சாமுவேல் தலைமையில்தோழர்கள் ஈ.எம். எஸ், நம்பூதிரிபாட் ஆர். உமாநாத் பேசினர்.வி சம்பகிவன், குழுவினரின் கலைநிகழ்ச்சியும் நடைபெற்றது.

13-11-71 குழித்துறை வேலுத்தம்பி திடலில் தோழர் வி. நேசமணி தலைமையில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில்தோழர்கள்ஏ. நல்லசிவன், கே. மோகனன் (தேசாபிமானி) ஆகியோர் பேசினர். செகுவேரா தியேட்டர்சாரின் கலைநிகழ்ச்சி நடைபெற்றது.

14-11-71 மாலை 5 மணிக்கு களியிக்காவிளையிலிருந்து ஊர்வலம் புறப்பட்டு குழித்துறை வழியாக மார்த்தாண்டம் காந்திதிடலை அடைந்தது. தோழர் ஜி. எஸ். மணி தலைமையில்பொதுக்கூட்டம் நடைபெற்றது. தோழர்கள் ஆர். உமாநாத், எம். எம். அலி மாநாட்டுத் தீர்மானங்களை விளக்கிப்பேசினர்.

**தீர்மானங்கள்**

பஸ் கட்டண உயர்வை கண்டித்தும் ரயத்து வாரி நிலவரியை ரத்து செய்ய கோரியும், தொழிலாளர் போராட்டத்தில் கைதுசெய்யப்படுபவர்களுக்குவிலங்கிடுவதைகண்டித்தும் தடுப்புகாவல் சட்டத்தைரத்து செய்யகோரியும் நியூஆம்பாடி கதவடைப்பு போராட்டத்தில் கைது செய்தவர்களை விடுதலை செய்யக் கோரியும், வழக்குகளை வாபஸ் வாங்கவும், வங்க தேசத்தை அங்கீகரிக்கவும் மேற்கு வங்கத்தில் நடக்கும் அரசியல் படுகொலைகளை நிறுத்தி மறுதேர்தல் நடத்தவும்.

குழித்துறையில் இயங்கி வரும் தேவி குமாரி பெண்கள் கல்லூரியை மாற்றக்கூடாதெனவும் பயிற்சிபெற்ற ஆசிரியர்களுக்கு உடனடி வேலை கொடுக்கவும் கோரி தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

# சொத்துச் சேர்த்த சண்டை ஜோராக நடக்குது!

சென்னை, நவ 20— "அதிகாரிகளைப் பயன்படுத்தி, சொத்து சேர்த்த தி. மு. கழகத்தினர் யார்—யார்? அவர்களுக்கு உடந்தையாக இருக்கும் அதிகாரிகள் யார்—யார்?— என்ற பட்டியலே என்னிடம் இருக்கிறது அதை நான் சட்ட மன்றத்தில் வெளியிடப்போகிறேன்" என்று சுதந்திர கட்சித்தலைவர் டாக்டர். ஹண்டே சாணூர்பட்டி கூட்டத்தில் பேசியிருப்பதாக 16-11-71 நவசக்தி' பத்திரிகைச் செய்தி வெளியிட்டுள்ளது.

### ஆணு பெண்ணு என்று முரசொலி கேட்கிறது

இதைக்கண்டு வெகுண்டெழுந்த 'முரசொலி' தனது 17-11-71 வெளியூர் பதிப்பில், ஒரு பெட்டிச்செய்தியில், 'ஹண்டே'வுக்கு அறைகூவல்: ஆண் மகனாயிருந்தால் மேடையில் பட்டியலை வெளியிடுவீரா?—என்று தலைப்பிட்டு ஒரு பகிரங்க அறைகூவலை விடுத்துள்ளது. அதில்:

" அவருக்குத் தெம்பு இருந்தால்—திராணி இருந்தால்—தைரியமிருந்தால்.........அவருக்கு ஆண்மையிருந்தால், சட்டமன்றத்தில் மட்டுமல்ல, அடுத்துப்பேசும் பொதுக்கூட்டத்தில் அந்தப்பட்டியலை வெளியிடுவாரா?

பொதுக்கூட்டம் அவருக்கு எதுவும் இல்லையென்றால், நாங்களே கூட்டம் ஏற்பாடு செய்கிறோம்; அங்கே பட்டியலை வெளியிடும்! வெளியிட வருவாரா ஹண்டே! பதில் என்ன?—எங்கே? எப்போது?"

மேற்கண்டவாறு முரசொலி அறைகூவல் விட்டது.

### ஆண்மை இருக்கவேண்டியது யாருக்கு என 'நவசக்தி' வினவுகிறது

இதற்குப் பதில் அளிக்கும் முறையில், 19-11-71 'நவசக்தி' யில் ஒரு தலையங்கமும், ஒரு பெட்டிச் செய்தியும் போட்டிருக்கிறது. பெட்டிச் செய்தியில், " இதுகூடவா தெரியவில்லை!"—என்று தலைப்பிட்டு, " பட்டியலை வெளியிடுவேன் என்று ஹாண்டே கூறியதும் முரசொலிக்கு உடனே ரோஷம் பொத்துக்கொண்டு வந்துவிட்டது! ஆண்மையிருந்தால், தெம்பு இருந்தால், பொதுக்கூட்டத்தில் அந்தப்பட்டியலை வெளியிடுவாரா?—என்று கூச்சல் போட்டிருக்கிறது. முரசொலி!

அவர்தான் சட்ட மன்றத்தில் வெளியிடப் போகிறேன்என்று சொல்லிவிட்டாரே, அப்படிச் சொன்ன பிறகு பொதுக் கூட்டத்தில் வெளியிடச் சொல்லுகிறீர்களே, சொல்லலாமா?

சட்டமன்றத்தில் சொல்லவேண்டிய முக்கியமான குற்றச்சாட்டுகளை முன்கூட்டியே பொதுக் கூட்டத்தில் யாராவது சொல்லுவார்களா? இதுகூடவா தெரியாது! அட, உலகை கொழுந்துகளே!"- என்று பெட்டிச் செய்தி வெளியிட்டுள்ளது.

தலையங்கத்தில் பின் வருமாறு குறிப்பிட்டுள்ளது:

"ஆண்மை யாருக்கு வேண்டும்?"- என்று தலைப்பிட்டு, மடியிலே கனம் இருப்பதினால்தான், கருணாநிதியின் குடும்ப ஏட்டுக்கு பயம் வந்து டாக்டர். ஹாண்டேயை மிரட்ட முற்பட்டிருக்கிறது. அவருக்கு தகவல்களை வெளியிட ஆண்மை இருக்கிறதா என்று ஆணவமாகக் கேட்டிருக்கிறது.

ஆண்மை, இருக்கவேண்டியது மத்திய புலனாய்வுத் துறைக்கு! குதிருக்குள் அப்பன் இல்லை என்று கழகத்தவர்கள் சொல்லுகிறார்கள். குதிருக்குள் யார் இருக்கிறார்கள் என்பதைத் தேடிப்பிடித்து நடவடிக்கை எடுக்க வேண்டியதுதான் மத்திய சர்க்காரின் ஆண்மைக்கு எடுத்துக் காட்டாக இருக்க முடியும்!"- என்று எழுதியிருக்கிறது.

நம்மைப் பொறுத்த வரையில், இது ஒரு நல்ல சண்டை. பொதுச் சொத்து பற்றிய பொதுவான பிரச்னை. நிஜமா? பொய்யா? யார்? எப்படி?- என்பது நாட்டுக்குத் தெரிந்தால் நல்லது தானே!

பல்கலைக்கழக நிர்வாகத்தில்

# மாணவர்களுக்குப்பங்கு! இங்கல்ல, பீகாரில் !!

பாட்னு நவ. 19— பீகார் மாநிலத்தில், பாட்னுவில் நடந்த துணை வேந்தர்கள் கூட்டத்தில், பல்கலைக் கழக நிர்வாகத்தில் மாணவர்களை பங்குபெறச் செய்வதற்கு கொள்கையளவில் முடிவெடுக்கப்பட்டது.

ஏழு மணி நேரம் நடந்த இந்த நீண்ட கூட்டத்திற்கு மாநில கல்வியமைச்சர் திரு. ஜாவர்ஹுசேன் தலைமைவகித்தார்.

அந்தக்கூட்டத்தில், பாட்னு, பீகார், மாக்தா, பகல்பூர், ராஞ்சி-பல்கலைக் கழகங்களின் துணைவேந்தர்கள் கலந்து கொண்டனர்.

மே. வங்கம், கேரளம் ஆகிய மாநிலங்களில் பல்கலைக் கழக செனட்டில் மாணவர்கள் பங்கு பெறுகின்றனர். அந்த மாநிலங்களில் மாணவர்கள் எவ்வாறு பல்கலைக் கழக நிர்வாகத்தில் பங்கு கொள்கின்றனர் என்று அறிந்தபின், இங்கும் அவ்வாறு செய்ய முடிவு செய்யப்பட்டது.

பீகார் மாநில மாணவர்கள் தொடர்ந்து போராடியதின் விளைவாக பல்கலைக் கழகங்கள் இந்த முடிவை எடுத்துள்ளனர்.

இன்னும் முழு வெற்றிகிட்டவில்லை. எனவே முழு வெற்றி கிட்டும் வரை தொடர்ந்து போராட, பீகார் மாநில இந்திய மாணவர் சங்கம் முடிவெடுத்துள்ளது.

# பீடித் தொழிலாளருக்கு ஊதிய நிர்ணயக் குழு

## திருச்சி மாவட்டத்துக்கு

சென்னை, நவ 17— திருச்சி மாவட்டத்திலுள்ள பீடித் தொழிலாளர்களுக்கு, குறைந்தபட்ச ஊதியத்தை நிர்ணயிக்க ஒரு குழு நியமிக்கப்படும்.

தொழில்அமைச்சர் என் வி. நடராசன் அவர்கள் முன்னிலையில், பீடித்தொழிலாளர் பிரதிநிதிகளும், பீடி மண்டி முதலாளிகளும் கூடிப்பேசி இந்த முடிவுக்கு வந்தனர்.

ஆறு மாதத்திற்குள் இந்தக் குழு தனது அறிக்கையைச் சமர்ப்பிக்கும்.

இதற்கிடையில், 1000 பீடி சுற்ற ரூ 3-20லிருந்து ரூ 3-25 ஆக அதிகரிக்கப்பட்டிருப்பதாக அரசுதகவல் கூறுகிறது.

## மதுரை மில்லில் டப்ளிங் ஸ்ட்ரைக்

மதுரை, நவ. 19— மதுரை ஹார்வி பழைய மில்லில் டப்ளிங் டிபார்ட்மெண்டில், லேஆப் சம்பளமில்லாமல் வேலை வாங்குவதைக் கண்டித்து 11—11—71 மாலை மணி முதல் தொடர்ந்து 3 ஷிப்டுகளிலும் உள்ளிருப்பு வேலை நிறுத்தம் நடந்தது.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (13 முதல் சந்து, வடக்குச் சித்திரை வீதி, மதுரை—1.) அச்சிட்டு, வெளியிடுபவர் ஆசிரியர்: கே முத்தையா.